# THE VIVEKA CHINTAMANI

## A Monthly Tamil Magazine and Popular New Review.

Devoted to the Diffusion of Light and Knowledge and to the "Children's Movement."

**Dealing with the Problems of Child Education, Social Service, Self-culture, and Ethics. Adapted for Use in Homes and Schools and approved as suitable for use in all Elementary and Secondary Schools.**

**God is Love: Knowledge in Power: AUM.**
**"Live and Learn"**—"ஓதுவதொழியேல்."
SATYAMEVA JAYATE.

**(Approved) Vol. XXII. (New Series)**

*(For the Tamil Year Ananda)*

***April 1914-March 1915.***

# விவேகசிந்தாமணி

அறிவைப் பரவச்செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகை.

அறிவுடையாரெல்லாமுடையார் அறிவிலா
ரென்னுடையரேனுமிலர்.—திருக்குறள்.
சற்க சசடறக் கற்பவை சற்றபின்
நிற்க வதற்குத் தக.—திருக்குறள்.

(ஸர்வஸம்மதம்) 22-ம் புத்தகம். (புதுவரிசை)

(ஆநந்த ஸூ)
1914-ஸூ எப்ரல்மீ முதல்1915-ஸூ மார்ச்சுமீ வரை.

PUBLISHED BY

**THE SECRETARY, DIFFUSION OF KNOWLEDGE AGENCY,
For the Lalita Publishing Co., (Sole Agents and Managers),
Lalitalaya, 19, Adam St., Mylapore, Madras, S.**

**1914-1915.**

**Bound Vol. Rs. 5.]** *All Rights Registered.* **[Unbound Vol. Rs. 4.**

# TABLE OF CONTENTS.

## Vol XXII New Series "Approved" (April 1914-March 1915)

---

## No. 1, For APRIL, 1914.

"OUR PLEDGE AND THE NEW EXPANSION OF OUR WORK."



## 1914௵ ஏப்ரல்மீ 1-வது சஞ்சிகை.

"பிள்ளைகளுக்குழைக்கக் கங்கணம்."



## No. 2, For MAY, 1914.

"BLESSED ARE THEY THAT ARE PRIVILEGED TO WORK FOR THE CHILDREN."

## 1914௵ மே௴ 2-வது சஞ்சிகை.



## No. 3, For JUNE, 1914.

"FATHER ! TELL ME, WILT THOU CHERISH OR LET ME PERISH ?"



## 1914௵ ஜூன்௴ 3-வது சஞ்சிகை.

## No. 4, For JULY, 1914.



## 1914௵ ஜூலை௴ 4-வது சஞ்சிகை.



## No. 5, For UUGUST, 1914.



## 1914௵ அகஸ்டு௴ 5-வது சஞ்சிகை.

## No. 6, For SEPTEMBER, 1914.

"THE MORAL OF THE PRESENT CONFLAGRATION OF EUROPEAN WAR."



## 1914ஞு ஸெப்டம்பர்மீ 6-வது சஞ்சிகை.



## No. 7, For OCTOBER, 1914.

"LET US SAY THAT NEVER AGAIN SHALL THIS HORROR COME UPON US."

## 1914ஸு அக்டோபர்மீ 7-வது சஞ்சிகை.



## No. 8, For NOVEMBER, 1914.

### THE VIVEKA CHINTAMANI WAR NUMBER—PART I.

"LEAVE TO YOUR CHILDREN, THE RICHEST OF ALL INHERITANCES."



## 1914ஸு நவம்பர்மீ 8-வது சஞ்சிகை.

### விவேகசிந்தாமணி-யுத்தகாண்டம்—முதற்பாகம்.



## No. 9, For DECEMBER, 1914.

### THE VIVEKA CHINTAMANI WAR NUMBER—PART II.

1914ஹ டிஸம்பர்மூ 9-வது சஞ்சிகை.

விவேகசிந்தாமணி-யுத்தகாண்டம்—இரண்டாம்பாகம்.



## No. 10, For JANUARY, 1915.

## THE VIVEKA CHINTAMANI WAR NUMBER—PART III.

"WE NEED HELP FROM ABOVE, FOR WITHOUT IT WE ARE HELPLESS."—SIR JOHN JELLICOE.



*(For fuller con'ents and List of Illustrations See within page V.)*

1915ஹ ஜனவரிமூ 10-வது சஞ்சிகை.

விவேகசிந்தாமணி யுத்தகாண்டம்—மூன்றும்பாகம்.



(மற்றவைக்கும் படங்களுக்கும் இச்சஞ்சிகையினுள்ளே பொருளடக்கம் பார்க்க),

## No. 11, For FEBRUARY, 1915.

"THE HOME AS THE GOAL AND CENTRE OF TRUE EDUCATION."



### 1915௵ பிப்ரவரி௴ 11-வது சஞ்சிகை.



## No. 12, For March, 1915.

"THE ENCOURAGEMENT OF MORAL AND INTELLECTUAL DEVELOPMENT OF THE PEOPLE."



### 1915௵ மார்ச்சு௴ 12-வது சஞ்சிகை.

"OUR PLEDGE AND THE NEW EXPANSION OF OUR WORK."

*"Give me not O God, that blind, fool faith in my friend that sees no evil where evil is, but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF TRUE."




அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்ஸத்.] [God is Love: Knowledge is Power: *Aum.*

**"New Series"** ஸத்தியமே ஜயம்—**SATYAMEVA JAYATE.** **"Approved"**

புத்தகம். **22.**] **1914**ஹு ஏப்ரல்மீ, ஆநந்தஹு சித்திரைமீ [சஞ்சிகை **1.**

## "OUR PLEDGE AND THE NEW EXPANSION OF OUR WORK."

On "All-saint's Day" (8th April) Our Editor, on requisition made, took his solemn pledge before the chosen representative of public instruction and child-education that with the New Expansion of our work he will (after his 29 years of approved and appreciated public service) exert himself once again to make *the Vivekachintamani* "the most amusing, the most interesting and the most instructive" and progressive Tamil Journal having the "widest circulation" among parents and children at home or in school.

*The Social Service Institute, 8th April* 1914.

### Lord Palmerston's Revelation to Queen Victoria.

Lord Palmerston, when Prime Minister of England (1861) was asked by Her Majesty Queen Victoria to remonstrate with Mr Delane, the Editor of the *Times*, on the attitude of the paper towards the King of Prussia. This was one and Lord Palmerston in his reqly to the Queen, reveals to His Majesty the Secret of business-success in "the Art of Newspaper production." The following is an extract from his letter to the Queen :—

"The actual price at which each copy of the newspaper is sold barely pays the expenses of paper, printing, and establishment! it is indeed said that the price does not repay those expenses. The profit of the newspaper arises from the price paid for advertisements, and the greater the number of advertisements the greater the profit. But advertisements are sent by preference to the newspaper which has the greatest circulation: and that paper gets the widest circulation which is the most amusing, the most interesting, and the most instructive. A dull paper is soon left off ...As mankind takes more pleasure in reading criticism and fault-finding than praise, because it is soothing to individual vanity and conceit to fancy that the reader has become wiser than those about whom he reads, so the *Times*, in order to maintain its circulation, criticizes freely everybody and everything; and especially events and persons, and Governments abroad,

because such strictures are less likely to make enemies at home than violent attacks upon persons and parties in this country."

*The Vivekachintamani.*—With the March issue, this excellent Tamil Monthly completes its twenty-first year. A perusal of the table of contents for the 21st volume shows how interesting and instructive the subjects are which have been dealt with in the course of the past year. This particular number is devoted to the illustration of "the triumph of soul over environment" and it starts with a brief description of the Association of Helpers or Bands of Hope, that did such good service to the cause of Diffusion of Knowledge in the nineties and early in the last decade. "Our coming of Age" is celebrated by "a social function" heralding the expansion of the work into the field of child-study and children's education. Next comes an illustrative biographical sketch of Mrs. Henry Fawcet whose marriage at the age of 19 with Mr. Henry Fawcet and subsequent married life is described as "a triumph of soul over enviroment." "The Forces of Gravitation" deals with the subject in simple and yet vivid sketches of the working forces of Nature. Ceylon is treated next and then comes "some mistaken notions of civilization" in which the evil aspects of imitation are humorously described and exposed. The articles on *Samashti Sevai Sadan* or "The Social Service Institute" and "the Problem of child education" deserve the thoughtful attention of the thinking public. We congratulate the *Vivekachintamani* on its coming of age and wish it a long and prosperous career in the future.—*The Hindu*, April 22.

---




## CHILD-EDUCATION :

### The Ministry of the Mother at the Cradle of Life.

SOME OPINIONS FROM EDUCATIONISTS OF GOOD STANDING.

"You must be with the boys, think with them, feel with them, play with them, suffer with them and *yet lead them on*. . . . . . Step down and go up."

"The journal has considerably changed its tone and it is to be remembered that the Editor will have to minister to the School-boys entirely. . . . . . Must aim at one class—the School-children."

"I am glad that you have made a correct diagnosis of the defects in the present system of Indian Education. In spite of the many improvements that have been recently made, it has to be said with regret that there is still, a good deal of the forcing in of the so-called knowledge-matter, instead of the drawing out and invigorating of the faculties of children by cultivating their observation in new fields of God's glorious work.

"Your magazine makes an earnest and honest attempt to remedy this defect, and if the matter, the language and the style of the articles in the future issues will continue to be as they are in those hitherto received, I have no doubt that the magazine will serve a very useful purpose in the education of the school-going children of this Presidency.

"Your short biographies of great Educationists, your articles on sanitation and village life, your lucid summaries of the pronouncements of our illustrious administrators on Education and other valuable contributions of a similar nature make excellent reading matter, and, in my view, the boys and girls who may be habitual readers of your magazine will surely become useful citizens of our country with true devotion to their God and their King and to the sweet service of their great mother land. With loving regards,—"

"There is one special feature in your journal which is rarely to be found in other journals. Each article or story, introduced into it, is based upon a useful moral lesson which every reader, young or old ought to learn to make himself and others about him happy in this world. I strongly recommend the introduction of your journal in all the elementary and secondary schools as a non-detailed text-book, also as a book for inculcating good sound, moral lessons to the rising young boys and girls of the present age".—

## பாலபோத சிக்ஷா ஞான வாதனம்.

"பிள்ளைகளைத்தான் வளர்க்கும் பேரறிவு" பெறுவது எப்படி? குழந்தைகளுக்கு பாலபோத சிக்ஷை செய்யும் தொழில் சிலாக்கியமானது. அதை சாதக சாதனத்தோடு சாதிப்பதுதானே இல்லறதர்மமாகும். "இல்லறமல்லது நல்லறமன்று." இந்த சாதனையைச் சாதிப்பது மஹா அருமையான வித்தை; அதிபிரயாசமானது. இதைவிடக் காசுபணம் தேடிக் குவியல் குவியலாக தனம் சேர்த்துவிடலாம். கல்வியெல்லாம்கற்றுக் கனகவித்தை செய்திடலாம். இன்னும் உலகாளும் மன்னர் மெச்ச ஊரெல்லாம் ஆளலாகும்! நாட்டார் மிகத்துதிக்க நகரையுந்தான் ஆளல் ஆகும். பிள்ளையைத் தான் வளர்க்கும் பேரறிவு பெறல் கஷ்டம்.

ஆகையால் பிள்ளையைப் பெற்ற பாக்கியசாலிகள் குழந்தைகளை வளர்க்கும் வித்தையை நன்றாய்ப் பயிலல் வேண்டும்.

"அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" ஆவர். ஆகலால் தந்தை தாயார் தெய்வம் போல் குழந்தைகளைக் காப்பாற்றி வளர்க்கல் வேண்டும். அதில் பிசகினால் அவர்கள் தம் கடமையைச்செய்தவர்களாகார்கள். பிள்ளைப்பேறு 'புத்' என்னும் நரகத்திலிருந்து தப்புவதற்காக மட்டுமல்ல. பித்ருக்கள், தேவதைகள், ஜனசமஷ்டி முதலான எல்லாவர்க்கங்களும் ஸத்புத்திர ஸந்தான விருத்தியினாலேயே நற்பேறு பெற்று நற்கதியடைகிறார்கள்.

ஆதலால் விவேகத்தாய் தன் குழந்தைகளை நற்குண நற்செய்கைகளிற் பழக்கி இளவயதில் தானே நல்ல சுபவாசனை படியச்செய்வாள். தந்தை தாயிடத்தில் குணமில்லாவிட்டால் பிள்ளைகளிடத்தில் குணமிருப்பது துர்லபம். "தன்குணத்தின் நற்சாக்ஷி ஜகத்திலுள்ள மெய்க்கீர்த்தி." இந்த மெய்க்கீர்த்தி நல்ல பிள்ளையைப் பெற்றவர்களுக்குத்தான் வித்திக்கும். இப்பிள்ளையைப் பெற்றவர்கள் என்ன தவம் செய்தார்களோ! என்று தம் மகவினுடைய நடத்தையைக் கண்டு உலகம் துதிக்கும் போதுதான் நற்கீர்த்தியுண்டாகும்.

ஆதலாற் கண்மணியே
அழகுமிகும் விண்மணியே
நீதியொடு நற்குணமும்
நீ பெரிதா யெண்ணிநிற்பாய்."

"இணையில்லா இவ்வுயிர்தான்
இவ்வுடலை விட்டாலும்
குணமே பெரியதென்று
கொண்டுநீ வாழ்ந்திடுவாய்."

"தன்னைகடை போல்நடப்பாய்
தக்கபேர் நீயெடுப்பாய்
பிள்ளையென்னும் பக்குவத்தே
பெருங்கீர்த்தி நீபடைப்பாய்."

"வாலிபந்தா னென்றுசொல்லி
மாசுமறு செய்யாதே
பாலியந்தா னென்றுசொல்லிப்
பழிபழுது செய்யாதே."

"பிஞ்சில் விளைவதுவே
பெரியமர மானபின்பும்
மிஞ்சிநிற்கும் வாசனையை
வேறாக்கக் கூடியதோ."

"மட்டில்லா உண்மையிது
மனதுதனில் நீதரிப்பாய்
தொட்டிற் பழக்கமதே
சுடுகாடு மட்டுமம்மா."

இப்படியெல்லாம் தாலாட்டிச் சீராட்டி அடிமடியில் கருத்தரித்த நாள் முதற்கொண்டு பிள்ளைப்பேறு பெற்றுப் பெருவாழ் வெய்துமட்டும் குழந்தையை அன்புஆதரவோடு, கண்ணை இமைகாப்பதுபோல் தீய வழக்கங்கள் படியாமலும், துர்ச்சகவாசம் கிட்டாமலும், அசுபவாசனைகள் வந்து அண்டாமலும், பிள்ளைகளைப் பாதுகாத்து வளர்ப்பது பெற்றோருடைய கடமையாகவிருக்கிறது. இதை அவர்கள் உள்ளபடி யோர்ந்துணர்ந்து நடக்காமையினால் எவ்வளவோ தீமைகள் நேரிடுகின்றன. அத்தீமைகள் அவர்களைமட்டும் பாதிக்காமல் அவர்கள் குடும்பத்தையும், அக்குடும்பம் வசிக்கும் ஜனசமூகத்தையும், ஜனசமூகங்களால் நிறைந்த ராஜ்யத்தையும், இராஜ்யத்துக்கு க்ஷேத்திரமாகிய தேசத்தையும், அந்த க்ஷேத்திரத்திற்கு க்ஷேத்திரஜ்ஞனான சமஷ்டிஜீவ

னும் விராட் தேவதையையும் தொடர்ந்து பாதிப்பனவாகின்றன. குழந்தைப் பருவத்தில் படியும் கொலை, களவு, காமம், பொய், கள்ளுண்ணல் முதலான குற்றங்கள் தாமே பின்னல் முட்டி முதிர்ந்து பஞ்ச மஹாபாதகங்களாகின்றன. குழந்தையில் சிறு பிராணிகளைப் பிடித்து வதைத்து விளையாடும் சிறுவர்கள் பெரியவரானல் குரூரசித்தராய்க் கொலை களவு முதலிய செய்ய அஞ்சாராகின்றனர். இது ஒவ்வொன்றுக்கும் பொருந்தும். ஆதலால் நம் விவேகசிந்தாமணித்தாய் சொல்லும் இப்புத்திமதிகளை மனதில் வைத்து இதை வாசிக்கும் எல்லோரும் குழந்தை-மனமுடையவர்களாய் (அஹம்பாவத்தைவிட்டு) குணத்தை வளர்த்து மணத்தைப்பெறல் வேண்டும். பின்வரும் புத்திமதிகள் ஸ்ரீலோகநாயகியாம் விவேகத்தாய் தன் குழந்தைஸந்தானத்துக்குச் சொல்நல்ல ஹிதோபதேசங்களாம், இவை உடலிற் பெரிய குழந்தைகளுக்கும் உடலிற் சிறிய குழந்தைகளுக்கும் ஒக்கப்பொருந்தும். "காணுமற் கலப்பால் குடிக்கும் குழந்தை" யென்பர். பக்குவமுடைய குழந்தை-மனம் வாய்ந்தவர்கள் இவ்வுபதேசங்களின் உட்கருத்தை உள்ளாய்ந்து உண்மையுணர்ந்து உள்ளத்திருத்துவர்.

1. "களவுசெய்த கைகளுக்குக்
   கைவிலங்கு பூட்டிடுவார்
அளவில்லாத் துன்பமுண்டாம்
   ஆற்றுதற்கு மாளாது.

2. "பொய்சொன்ன வாயில்
   புழுப்புழுக்கு மென்ன ரசே
மெய்சொன்ன வாயில்
   விளம்புவதும் சீனியம்மா."

3. "மதிகேடு செய்தாலும்
   மார்க்கமுண்டு தப்பியிடச்
சதிகேடு செய்யாதே
   தங்கள்கண்ணி தங்களுக்கே."

4. "வஞ்சித்தார் வாழார்
   வழிப்பறித்தார் பாழாவார்
பஞ்சான தேஹமிது
   பகவா னொருவனுண்டு."

5. "கச்சைகட்டிக்கூத்தாடிக்
   கடைத்தெருவி லோடேந்திப்
பிச்சையெடுத் துண்டாலும்
   பிறர்துயரஞ் செய்யாதே."

6. "தணியாத கோபமுள்ளார்
   தயக்கம்வந்து வாழ்வார்கள்
பணிவாய் நடப்பவர்க்கோ
   டாரெல்லாங் கையாட்சி."

7. "மூலம் தனத்தினுக்கு
   முயற்சியென்பார் சிற்சிலபேர்
காலம் திரவியமாம்
   கருத்துடையார் காட்சியிலே."

8. "உடலம் பிணிநீங்கி
   உள்ளமதும் நற்றெளிவாய்த்
திடம்பெற் றிருப்பதுவே
   பேரரிய பாக்கியமாம்.'

9. "அசலாது வானோதான்
   அகிலமதி லெல்லோர்க்கும்
சகவாசம் போல்நடக்கை
   சத்தியந்தான் சத்தியந்தான்."

10. "மாருச்சு லகமதை
   மாற்றவது நன்மௌனம்,
ஆறுத் துயரமெல்லாம்
   ஆற்றுவதோ ஈசனருள்."

11. "சத்தியமே நன்மார்க்கம்
   தவறவரு மற்றெதிலும்
வித்தையிதில் லாபமெத்த
   விசுவாசம் மெத்தமெத்த."

12. "பூட்டியிட்ட தேஹமிது
   போயழியு மெந்நாளும்
நாட்டிலுள்ள வாழ்வினுக்கு
   நற்பெயரே கண்டபலன்."

13 "வாலிபந்தா னானாலும்
   மானமறு சம்மதியேன்
பாலியந்தா னானாலும்
   பழிபழுது சம்மதியேன்."

14. "சித்தம்மொழி தானதிருந்திச்
   செயல்திருந்தி நீடப்பாய்
உத்தமியாள் பெற்றெடுத்தேன்
   ஒருகுறையுஞ் செய்யாதே."

15. உள்ளபல பூமியெல்லாம்
ஓர்குடைக்கீ ழாண்டாலும்
பிள்ளையை வளர்க்கும்வித்தை
பிரயாச மானவித்தை."

16. "ஆராய்ந் துலகனைத்தும்
ஆண்டாலும் பிள்ளையொன்றை
நேராக்க மாளாது
நிச்சயந்தான் நிச்சயந்தான்."

17. "நிச்சயந்தான் நிச்சயந்தான்
நிஜம்சொன்னேன் கேள்கண்ணே
உச்சிதமாய் உனைப்பெற்ற
உத்தமியான் சொலக்கேளாய்!"

18. "கண்ணேயென் சற்பகமே
கனகமாரி பொழிந்தாலும்
விண்ணேதான் வீழ்ந்தாலும்
வீண்வார்த்தை சொல்லாதே."

19. பெண்ணேயென் பெண்ணரசே
பொற்கொடியே கற்பகமே
கண்ணேயுன் முகம்பார்த்துக்
கவலையெல்லாம் தீர்ந்தேனன்."

20. "கண்ணே யுறங்குறங்கு
கற்பகமே சித்திரைபோ
மண்ணிலுள்ள யாபேரும்
வாழியென்று சித்திரைபோ."

21. "பிள்ளையை வளர்ப்பதிலே
பேரறிவு பெற்றுஎன்ற
*தள்ளையெல்லாம் வாழியென்று
தண்ணமுதே சித்திரைபோ."

---

பாலபோத சிக்ஷா ஸாதனம் முற்றிற்று.

---

இது என்தாயார் ஸ்ரீ லோகநாயகிக்கு அர்ப்பணம்.

---

## SOME INFLUENCES ON MORALITY.

### The Responsibility of Parents.

"Coleridge calls conscience 'the pulse of reason;' but as this inward monitor is often set at naught, other influences are required for the promotion of what is good and the repression of what is evil. These are, (1) the influence of the family; (2) the influence of the teacher or *Guru*, (3) the inuflence of society, *i.e.*, the fear of public opinion or the desire of public approbation, (4) the teachings of religion, and (5) the repressive authority of the state which provides penal laws for crimes. The earliest of these influences is the family and it is the purpose of this to discuss how far parents realize the responsibility that is on them. A home is primarily the "nurse of virtue." As a plant thrives in its natvie soil so the moral principles are best developed at home."—*Rao Bahadur A. C. Pranatharthihara Iyer, Inspector of Schools.*

*தள்ளை-தாய்.

---

## ஸன்மார்க்கஸாதனம்.

### பெற்றோர் கடமை.

"நன்மார்க்கமேதுவோ அதுவே ஸன்மார்க்கம்."

" சத்தியமே நன்மார்க்கம்
தவறுவரு மற்றெதிலும்
வித்தையிதில் லாபமெத்த
விசுவாசம் மெத்தமெத்த."

ஸத்தியமே நன்மார்க்கமாகையில் அதைப் பத்தியமாய் அனுஷ்டிக்க வேண்டும. ஸத்தியானுஷ்டானம் உள்ளவரையில் மனச்சாக்ஷி குன்றாது. மனச்சாக்ஷியொன்றே நீதிக்குப் பரமசாதனம். அந்த மனச்சாக்ஷிக்கு ஒப்பிதமாக நடக்காவிட்டால் ஸன்மார்க்கத்துக்கின்றியமையாத பரமஸாதனம் நழுவிப்போம். அது நழுவிப்போங்கால் அதற்கு ஈடாக வேறு ஸாதனங்கள் ஏற்படவேண்டியிருக்கின்றன. இவை (1) குடும்ப ஸாதனம், (2) குருஸாதனம், (3) ஜனஸமூக ஸாதனம்; அதாவது ஊரொக்க வாழ்ந்து உலகொப்ப நடக்கவேண்டுமென்கிற இயற்கையான அவா (ஆசை), (4) மதஸம்பந்தமான சிக்ஷாஸாதனம், (5) அரசனது துஷ்ட நிக்ரக தாமமாகிய ராஜதண்ட ஸாதனம். இவைகளில் மனச்சாக்ஷிக் கொப்ப நடப்பதே பரமஸாதனம். மற்றவையெல்லாம் உபஸாதனங்களாம்.

"குலத்தளவேயாகும் குணம்."

இந்த உபஸாதனங்களில் முக்கியமானதாயும், பிரதம விசேஷமானதாயுமுள்ளது குடும்பஸாதனம். "குலத்தை யடுத்தது குணம்" என்பது ஒரு பழமொழி. "நூலைப்போல சேலை, தாயைப்போல மகள்" என்பது இன்னொரு பழமொழி "குலத்தைப்பார்த்துப் பெண்ணைக்கொள் கோத்திரத்தைப்பார்த்து வரனைக்கொள்" என்பது மற்றொரு பழமொழி. இதனால் குலத்தைப் பொறுத்தது குணம் என்பது உலகானுபவத்தில் உண்மையாகக் கண்ட அனுபவமென்று ஏற்படவில்லையா.

குடும்பத்தில் தாயாரது குணமும் மணமும் குழந்தைகளுக்குத் தானாகப்படியும். கருவிலிருக்கும் பொழுதே தாயாருடைய எண்ணம் குழந்தைகளைப் பாதிக்குமென்பது நிஜமென்று ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கிறது. அன்றியும் தாலாட்டிச் சீராட்டி வளர்க்கும் தாயார் புத்திசாலியும் விவேகமுடையவளுமானால் "தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும்" என்பதை யுணர்ந்து தொட்டிலிற் குழந்தையாயிருக்குங் காலையில் தானே நல்லவாசனை படியும்படிப் பிள்ளைகளைப் பழக்கி வளர்த்து வருவாள். இப்படித் தாயார் குழந்தைகளை வளர்க்க வேண்டிய முறையை "பாலபோத சிக்ஷா ஞான ஸாதனம்" என்கிற தலைப்பின் கீழ் இச்சஞ்சிகை முதலில் விளக்கிக் காட்டியிருக்கிறோம்.

நம்மில் பெற்றோர்களாயுள்ளவர்கள் குழந்தைகளை வளர்க்கும் காரியத்தில் தங்கள் பொறுப்பை யுணர்ந்து நடக்கிறதில்லை யென்பது அவர்கள்மீது நியாயமாய்ச் சொல்லத்தக்க ஒரு பெருங்குறையாயிருக்கிறது. அந்தக் குறையை நிவர்த்தித்துக்கொள்ள நம்மவர்கள் முயல வேண்டும். உத்தியோகஸ்தர்கள் பணம் தேடும் ஆரவாரத்தில் குழந்தைகளை நன்றாக கவனிப்பதில்லை. அவர்கள் மனைவிகளான தாய்மாரோ, தனவந்தர்களானால் தாதியிடம் குழந்தையை ஒப்புவித்துவிட்டு தாங்கள் நிர்விசாரமாயிருக்கிறார்கள். தனமில்லாத ஏழைகளானாலும் விவேகசூந்யத்தால் குழந்தைகளை வளர்க்கும் முறை தெரியாமல் தங்கள் மௌட்டியத்தால் குழந்தைகளுடைய தேஹத்துக்கும், மனதிறகும், வளர்ப்புக்கும் தீங்கு வரும்படி நடந்து கொள்ளுகிறார்கள். இதையெல்லாம் ஸ்கூல் இன்ஸ்பெக்டர் ராவ்பஹதூர் ஏ. வி. ப்ரணதார்த்திஹர ஐயரவர்கள், பெல்லாரி முனிஸிபல் ஹைஸ்கூல் ஹெட்மாஸ்டராக இருந்தபொழுது செய்த ஒரு உபந்யாஸத்தில் தெளியக் காட்டி விளங்க வைத்திருக்கிறார்.

"பேதைமை யென்பது மாதர்க்கணிகலம்" என்று சொல்லியிருக்கிறதே யென்று பெண் பெண்டாட்டிகள்படியாத மூடங்களாய்விவேக சூந்யர்களாயிருப்பதுதங்களுக்கு அழகென்று நினைக்கிறார்கள். இது மிகவும் தப்பு. "பேதைமை" என்னும் பதத்திற்கு விவேக சூந்யமான மௌட்டியம் என்று அர்த்தமல்ல; அது அநர்த்தமாகும். ஆனால் பேதைமை யென்றால் என்னவெனில் அத்துவித ஞானத்துக்கு வேறான வஸ்து - விவேகஞானம். இதற்கு உதாரணம் வசிஷ்டர் தசரதகுமாரனுக்குச் சொல்லிய சிகித்துவஜராஜன் கதையில் சூடாலையாம் கதாநாயகியிடத்தில் காணலாம். அவளுக்கு அத்துவித ஞானம் ஸித்தித்திருந்தாலும் அதை உலக நடவடிக்கையில் காட்டிக் கொள்ளாமல் ஊரொக்க வாழ்ந்து உலகொக்க நடந்துகொண்டு தன கணவனாகிய அரசனையும் கும்பமுனிரூபம் கொண்டு நல்வழி காட்டிச் சீர்திருத்தி அளவிலா அகண்டானந்தம் ஸித்திக்கச் செய்து மறுபடியும் அவனை உலகத்தின் கண் தர்மவழிக்குக்கொண்டு வந்து ஞானத்துக் கழகு தாமரையிலையிற்றண்ணீர் போல இருந்து உலகொப்ப நடப்பதேயென்று நிரூபித்துக் காட்டினாள்.

அறிந்தும் அறியாதுபோலிருந்து அடக்க ஒடுக்கமாய் நடந்து கொள்வதையே "பேதைமை" யென்று சொன்னதன்றி மௌட்டியத்தைச் சிலாகித்துச் சொன்னதில்லை. வித்தை

யை "அவித்தை" யென்று சொன்னது போல் வித்யாகர்வ மில்லாதிருக்கவேண்டி "அடக்க ஒடுக்கத்தோடு கூடிய விவேக-ஞானத்தை" பேதைமை யென்று காவியாலங்காரமாகச் சொல்லி அதை "மாதர்க்கணிகலம்" என்று சொன்னார். அதனால் மௌட்டியத்தையே புகழ்ந்ததாகமாட்டாது. நமது புருஷர்கள்கூடப் பெற்றோர்கடமையை யறியாது நடந்து கொள்கிறார்கள். ஸத்புத்திர ஸந்தானப் பேறு பெறுதல் சாஸ்திரோக்தமான ஒரு நல் வித்தையாகும். இதை "Eugenics" என்று மேற்றிசையார் பயிலத்துவக்கியிருக்கிறார்கள். அதையே நாம் விவாகதர்மமாகக் கொண்டாடுகிறோம்.

நமக்குள் விவாகம் என்பது ஒருவித ஒப்பந்தமாத்திரமன்று. அது "ஆயிரங்காலத்துப் பயிர்" என்பர். அதை ஓர் ஸம்ஸ்கார தீக்ஷையாகக்கொண்டு அனுஷ்டித்து வரவேண்டுமென்று தர்மசாஸ்திரங்கள் முறையிடுகின்றன. காரியத்தில் காலவிசேஷத்தால் விவாகமென்பது மிக்கச் சீர்கெட்டிருக்கிறது. அதைச் சீர்ப்படுத்தவேண்டிக் குழந்தைகளும் பள்ளிப் பிள்ளைகளும் விவாக லக்ஷியத்துக் கின்றியமையாத விவாகதர்மத்தை நன்குணர்ந்திருக்கவேண்டும். அவர்களுக்காக விவாக தர்மத்தைப்பற்றிப் பின்னெழுதியிருக்கிறோம்.

---

## ON THE CHOICE OF A WIFE.

### விவாகதர்மம்.

### வதூலக்ஷணம்.

மேலேசொன்ன விவாக தர்மத்தை யனுஸரித்துத் தகப்பனார் தனக்கு இல்லறத்துணைவியாயிருக்கப் பெண் தேடின கதையை விவேகத்தாய் தன் குழந்தைகளுக்குத் தாலாட்டுப் பாட்டாகச் சொல்லியிருப்பதைக் கீழே யெடுத்துப் பிரசுரிக்கிறோம்.

### தாய் பிள்ளைக்குச் சொல்லல்.

### தாலாட்டுப் பாட்டு.

(1) "ஊரெல்லாம் ஸம்மதிக்கும்
உத்தமியாள் வேணுமென்றார்
பாரெல்லாம் ஸம்மதிக்கும்
பதிவிரதை வேணுமென்றார்.

(2) "சத்திடத்தில் நாயகமாய்த்
சயவுதனிற் சாசரமாய்ப்
புத்தியுத்தி யுள்ளதொரு
பொற்கொடியாள் வேண்டுமென்றார்.

(3) "வீட்டினுக்கு நல்விளக்கு
வெளிதனக்கும் ஆபரணம்
நாட்டிலுள்ள பெண்களுக்கு
நாயகந்தான் வேணுமென்றார்.

(4) "*பொற்பிருந்தும் பூணிருந்தும்
போற்றுசுகந் தானிருந்தும்
சற்புநல மில்லாப்பெண்
சாட்டுப்பே யாகுமென்றார்.

(5) "காட்டுக் குடித்தனமாய்க்
கனவறுமைப் பட்டாலும்
பாட்டும் படிப்புகளும்
பலகுணமும் வேணுமென்றார்.

(6) "ஆட்சியில்லை யானாலும்
அழகில்லை யானாலும்
மாட்சிபெற்ற வார்த்தையொடு
மதியூகம் வேணுமென்றார்.

(7) "வட்டிவட்டி யாய்ப் பொருள்தான்
வளமபெருகி வந்தாலும்
செட்டுமட்டு மாய்த்தனத்தைச்
செலவுசெய்ய வேணுமென்றார்.

(8) "வையகத்திற் சேவலமாய்
மாட்சியற்று நின்றாலும்
கையிறக்க மாதுசொர்ணக்
களஞ்சியந்தா னென்றுரைத்தார்.

(9) "வரிசையொடு தன்வீட்டில்
வாழ்ந்திடும்பெண் ணானாலும்
புருஷனே தெய்வமென்றார்
போற்றிடும் பெண்மணிக்கு.

(10) "செல்லை கொள்ளை யாய்ச்சொர்ணக்
குவியலில்லை யானாலும்
பிள்ளைகளைத் தாம்வளர்க்கும்
பேரறிவு போதுமென்றார்.

(11) "மதலைகளைப் பார்க்கவைத்து
வன்புதன்பு சொன்னாக்கால்

---

*பொற்பு-அழகு; "பொற்றெனப்படுவது சொற்றிறம் புராமை," கற்புநலம்-பதிவிருதாசீலம்,

பதங்குலைந்து பின்வாழ்வு
பாழாகுமென்றறிந்து,

(12) "வாக்கடக்கிச் செய்கையொடு
மனசினையுந்தானடக்கி
தாக்கியிடும் நற்சவனம்
சாபரிக்க வேணுமென்றார்.

(13) "வாவிபமுங் காயிசமும்
வாய்ச்சவுநக் சாட்டுமென்று
மேலறிவாய்த் தான்வளர்ச்ச
வேணுமிசக் கல்வியென்றார்.

(14) "பணிவாகத் தெண்டனிட்டுப்
பர்த்தாவைப் பேணுமுறை
அணியாகக் கொண்ட பெண்ணே
ஆசையென்றார் வேணுமென்றார்.

(15) "அவிசொண்ட மாலையிட்ட
அன்புடைய நாயகனார்
வெளிவேலை தீர்ந்தபின்பு
வீட்டில்வரும் வேளையிலே,

(16) "மதியிலே மந்திரியும்
மனத்தபவில் மாதாவும்
மதிபோற் குளிர்முகமும்
வார்த்தையிலே சீனியுமாய்,

(17) "வணங்கியுபசாரமுடன்
வந்தேற்றுக் கைகொடுத்தும்
இணங்கியிடும் வார்த்தைகளால்
இயல்புகளைத் தானறிந்தும்,

(18) "மாறாத் துயரமெல்லாம்
மாற்றிமண வாளனவன்
ஆறுதுக்கமெல்லாம்
ஆற்றமின்னாள் வேணுமென்றார்.

(19) "பானைசுசி சட்டிசுசி
பாத்திரங்கள் வீடுசுசி
ஆனதொரு தனதேஹம்
அளவில்லா நல்லசுசி,

(20) "அத்தையார் பெற்றதன்னை
அம்மானார் தந்தசப்பன்
பர்த்தாவின் உற்றோர்தன்
பந்துவென எண்ணுமனம்,

(21) "உள்ளதொரு பெண்வேணும்
உள்ளதெல்லாந் தோற்றாலும்
சொன்னுவது மேலுரைத்த
குலக்கொடியே யென்றுரைத்தார்,'

"குலக்கோடி" யென்னும் பதத்தில இவ்வளவு அர்த்தம் பொருந்தி குணமும் மணமும் சேர்ந்திருக்கிறதென்பதை இதை வாசிக்கும் எல்லாரும் சிந்தித்து மனதில் வைக்கவேண்டும். ஆகையினால்தான் "குலம் பெரிது குணம் பெரிது" என்று சொல்கிறார்கள்.

"வரப்புயர வயலுயரக்
குடியுயரக் கோனுயரும்"

என்றதுபோற்

"குணம் பெருசக்
குலம் பெருக—நாட்டின்
நலம் பெருக
எலாம் பெருகும்"

என்பது ஸத்தியம், ஸ்த்தியம், ஸத்தியம்.

நீரில் முளைத்த ஆம்பல்கொடி அந்த நீர்நிலையின் ஆழம் எவ்வளவோ அவ்வளவாக வளர்ந்து நிற்கும். "கற்றதோர்கல்வியும் மனப்பயிற்சி" யென்றபடி ஒருவன் மனதைப் பழக்கும் விதி விலக்குகளையுணர்ந்து ஓதும் நூல்களைக் கசடறக் கற்றுக் கற்றபடி நிற்கல்வேண்டும். இப்படிக் கல்விகற்ற அளவுக்குத் தக்கபடியே அவனிடத்தில் நுட்பமான அறிவு (கூர்புக்தி) யிருக்கும். பூர்வத்தில்செய்த தவம் (மனசை யடக்கல்) எவ்வளவோ அந்த அளவாக நிற்கும் தற்காலத்தில் அவன் அனுபவிக்கப்பெற்ற செல்வம். அவன் குணம் பிறவியைப் பொறுத்ததாதலால் அது "குலத்தளவேயாகும்." இதை ஔவையார் அருளிச் செய்துள்ள மூதுரையில் பரக்கக் காணலாம்.

"நீரளவே யாகுமாம் நீராம்பல் தாங்கற்ற
நூலளவே யாகுமாம் நுண்ணறிவு—மேலைத்
தவத்தளவே யாகுமாந் தாம்பெற்ற செல்வம்
குலத்தளவே யாகுங் குணம்."

---

## THE AUTOBIOGRAPHY OF WATER.

*A Lesson in Nature Study for School-boys.*

### பிரகிருதி வித்தியாம்சம்.

### தண்ணீர் சொல்லிய தன்வரலாறு.

பள்ளிப்பிள்ளைகளுக்காக எழுதப்பட்டது.

பீடிகை.

சிறுவர்க்கென்று சிலகதை குட்டியண்ணாவும் மற்றவர்களும் எழுதிவருகின்றனர். விவேகசிந்தாமணியின் 'சிறுவர் பக்கம்' போக மற்றப்பக்கங்களில் வயதிலும் அறிவிலும் முதிர்ந்தோருக்கு உபயோகமாகப் பற்பலர் பற்பல சங்கதிகளை எழுதிவருகிறார்கள். ஆனால், சிறுவர்க்கும் பெரியவர்களுக்கும் நடுவிலுள்ள பள்ளிக்கூடப் பிள்ளைகளுக்கு உபயோகமாக ஒருவரும் எழுதவில்லை. அவர்களுக்கு நான் என் அனுபவத்தில் கண்ட சில சம்பவங்களைச் சொல்லுகிறேன். கவனமாய்க் கேளுங்கள்.

தண்ணீரின் முறுமுறுப்பு.

சிநேகிதர்களே! நான் சில நாட்களுக்கு முன் என்னூருக்கு அருகிலுள்ள மற்றொரு ஊருக்குப் போய்த் திரும்பி வரும்போது புகைவண்டியிற் பிரயாணம் செய்வதற்காக ரெயில் ஸ்டேஷனுக்குப் போனேன். அங்கு 'டிக்கட்டு' வாங்கி அரைமணி நேரம் வரையில் புகைவண்டி வரவில்லை. ஆதலால் அந்த 'ஸ்டேஷனில்' அங்குமிங்கும் உலாவிக் கொண்டிருந்தேன். அப்போது ஸ்டேஷன் ஓரத்தில் யானைத் துதிக்கையைப்போல் ஒன்று என் கண்ணுக்குத் தோன்றியது. அது என்னவென்று கண்டறியும்படி அதன் சமீபத்திற் சென்றேன். சில விடங்களில் வைத்திருக்கும் தபால் பெட்டியைப்போன்ற உயரமான உருக்குத் தூணிலிருந்து அந்தத் தோல் துதிக்கை தொங்கிக் கொண்டிருந்தது. அந்தத் துதிக்கை நுனியிலிருந்து சொட்டுச் சொட்டாய்த் தண்ணீர் வடிந்துகொண்டிருந்தது. அந்தத் தண்ணீர் எங்கிருந்து வருகிறதென்று சோதித்துப் பார்க்கையில் முன் உருக்குத்தூணாய்த் தோற்றியது, தண்ணீர் நிறைந்த உயர்ந்த தொட்டியென்றும், அதிலிருந்து தோல்துதிக்கையின் வழியாய்த் தண்ணீர் சொட்டிக்கொண்டிருந்ததென்றும் அறிந்தேன். அப்போது யாரோ ஒருவர் சில வார்த்தைகளை முறுமுறுத்துக் கொண்டிருந்ததாக எனக்குத் தோன்றிற்று. அப்படி முறுமுறுத்தது யாரென்று என்னைச் சுற்றித் திரும்பிப் பார்த்தும் ஒருவரையும் சமீபத்திற் காணேன். என்றாலும் என் செவியில் முறுமுறுப்பு வரவர அதிகமாகவே கேட்டது. சிறைச்சாலையில் அடைபட்ட ஒருவன் உள்ளிருந்து தன் அவஸ்தைகளைப்பற்றி முறுமுறுத்துக்கொண்டிருப்பது போலத் தோன்றிற்று. நன்றாய் நிதானித்துக் கேட்கையில், அது உருக்குத்தொட்டியில் அடைபட்டிருந்த தண்ணீரின் முறுமுறுப்பு என்று திட்டமாய்த் தெரிய வந்தது. அதன் முறுமுறுப்புக்கு அர்த்தம் என்னவென்று யோஜிக்க, மேகத்தைப்போல் உருவெளித்தோற்றம் ஒன்று என் மனக்கண்ணுக்குத் தென்பட்டது. தினம் வருணதேவனை ஸ்துதிசெய்து வழக்கப்பட்ட என் மனதுக்கு அது வருணதேவனுடைய சாயைபோல் தோற்றியது. அந்த உருவெளித்தோற்றத்தை அம் முறுமுறுப்புக்கு என்ன அர்த்தம் என்று கேட்டேன். அதற்கு அது அத்தண்ணீர் தானாக அதன் குறையை எடுத்துச் சொல்லிற்று. அது என்னவென்றால்:—

அம்முறுமுறுப்புக்கு அர்த்தம்.

"இதென்ன வாழ்வு! என்னாளும், என் ஆயுள் முழுவதும் இத்தொட்டியில் அடைபட்டிருப்பதில் என்ன சுகம்? 'சும்மா இருத்தல் சுகம் சுகம் எனச் சுருதியெல்லாம்' சொல்லுகின்றனவாம்!! அதென்ன சுகம்? இடுக்கமான இருட்டறையில் என்னை அடைத்து வைத்திருக்கின்றனர். நான் சர்க்காருக்கு விரோதமாக ஒரு குற்றமும் செய்யவில்லையே. ஐயோ! என்னை இந்தச் சிறையிலிருந்து விடுவிப்பார்களானால்

நான் என் மனப்போன போக்கில் போவேன் அப்போது என்னை வாய்க்கால் என்பார்கள். செழிப்பான வயல்களுக்கு மத்தியில் எவ்வளவோ சந்தோஷமாய்ச் சாடி ஓடி இசைபாடி சிநேகிதருடன் கூடி விளையாடிக்கொண்டிருப்பேன். அருகிலுள்ள செடிகளின் புஷ்பங்கள் குனிந்து என்னை அன்புடன் முத்தமிடும். பக்ஷிகள் சந்தோஷத்துடன் காலைமாலைகளில் கக்ஷியாய் என்னிடத்தில் வந்து தம் சிறகுகளை அடித்துத் தலையை அமுக்கிக் குளித்துச் செல்லும். மேலும் உல்லாசமாய் என்மேல் துள்ளித் துள்ளிவிழும் மீன்களுடன் சல்லாபமா யிருந்தாலுமே என் பொழுது சந்தோஷமாய்க் கழியுமே! இதெல்லாம் விட்டு ஒன்றுக்கும் உதவாமல், ஒருவேலையும் செய்யாமல், 'பன்றி போல் தின்று' சோம்பலாயிருக்கும் சில மனிதரைப்போல் இந்த சிற்றறையில் அடைபட்டிருப்பதில் என்னபயன்? யாரையேனும் பார்க்க முடியுமா? என்னுடன் யாரேனும் சம்பாஷிக்க முடியுமா? என்னை ஓர் உபயோகமில்லாத வஸ்துவென்று உலகத்தோர் நினைத்திருப்பார்களே. என் உபயோகத்தை அவர்களுக்குக் காட்ட ஒரு வழியும் காணேனே. இதுவும் அன்றே அயன் என் தலையில் எழுதிய விதியோ!!" என்று தன்னையும் தன்னைப்படைத்த கடவுளையும் நொந்துகொள்ளும் சோகத்துவனி யப்பா, அது!—என்றது.

### சிறைமீட்சி.

"'இதென்ன விபரீதம்! ஐயோ! இந்தத் தண்ணீர் இவ்வளவு அவஸ்தைப் படுகிறதே; இதைச் சிறையினின்றும் விடுவிக்கும் இரக்க சித்தமுள்ளவர் ஒருவருமில்லையா' என நான் நினைத்துக்கொண்டிருக்கையில், "இதோ வந்தேன்" என்று புகைவண்டி, 'ஊதும் சத்தத்தால்' தன் வரவைத் தெரிவித்துக்கொண்டே ஓடிவந்து எனக்கு சமீபமாக நின்றது. நின்றதும் அவ்வண்டியிலிருந்து கரித்துணி போர்த்திருந்த ஒரு நாட்டுத்துரை கீழே குதித்து, அந்தத் தொட்டியிலிருந்து ஒரு குமிழ் ஆணியைத் திருப்பிவிட்டுத் தண்ணீரைப்பார்த்து "இங்கே விரைந்து வா: உனக்குக் கொஞ்சம் வேலை யிருக்கிறது: சீக்கிரம்!" என்று உத்திரவு செய்வது போல் அண்ணாந்துபார்த்தார்.

### கோதிப்பும் கொந்தளிப்பும்

உடனே தண்ணீர் "தங்கள் சித்தம், என் பாக்கியம்" என்று முதலில் அவர் பாதத்தில் விழுந்து நமஸ்காரம் செய்து, பின் கடகடவென்று பாய்ந்து நீராவி யந்திரத்திலுள்ள ஒரு தொட்டியினுள் சென்று நின்றது. அந்தத் தொட்டிக்கு அடியில் செங்கல் சூளையில் தீ எரிவதுபோல நிலக்கரி சுவாலித்து எரிந்துகொண்டிருந்தது. அரை நிமிஷத்தில் அந்தத் தொட்டித் தண்ணீரில் கொதிப்பு உண்டாயிற்று. அப்போது அந்தத் தண்ணீர் பட்ட பாட்டை என்னென்று சொல்லுவேன்! அதை நினைக்க நினைக்க அதிகப்பரிதாபமாயிருக்கிறது! அப்போது அது கொதித்துச் சொன்னதாவது: "இதென்ன! என்னை இப்படி வருத்துகின்றனர்! இரக்கமில்லா மனிதர் என்னைத் திறக்க மனங்கொள்ளாமல் இருக்கின்றனர். அவர் இறக்கக்கடவர்! ஐயோ, இதுவரை இப்பாடு நான் எப்போதும் பட்டதில்லையே. ஒருநாள் பேதை மடமாதர் சிலர் கூட்டாஞ்சோறு சமைப்பதற்கென்று என்னைப் பானையில் அடைத்துத் தீயினால் சுட்டுக் காய்ச்சினர். அதுவோ என்னைக் கொன்றது போலவே இருந்தது. என்றாலும் அவர் அறியாப் பெண்க ளானதால் பொறுத்திருந்தேன். இதென்ன! அதிலும் பெரிய அவஸ்தையா யிருக்கின்றதே! ஓடிப்போகவென்றால் ஒரு ஊசி நுழைக்கவும் வழியில்லை. அப்பப்பா! இக் கொடியரைப்போல் கல்நெஞ்சரை நான் எங்குங் கண்டதில்லை"—என்று கதறிக் கொந்தளித்து அங்குமிங்கும் முட்டியும் ஒன்றும் முடியாமல் தன் பிராணனைவிட்டு ஆவியைப் போக்கிற்று. பரிதாபம்! பரிதாபம்! இப்படியாக அந்த நல்ல தண்ணீர் ஸ்தூலவாழ்வொழிந்து சூக்ஷ்மவாழ் வெய்தியது.

நீராவியின் சூக்ஷ்ம சக்தி.

தண்ணீர் போக்கிய இந்த ஆவியோவெனில், தண்ணீரைவிட அதிகப் பாடுபட்டபோதிலும், தனக்கு ஏதோ பலமும் சக்தியுமிருப்பதாய்க் காட்டியது. தண்ணீரைப்போல் அது அழுது தத்தளிக்கவில்லை. ஆனால் சினங்கொண்ட நாகம்போல் சித் சித் என்று சீறிக் கோபத்துடன் 'என்னை இப்போது விடுவிக்கின்றீர்களா, இல்லையா? நான் தண்ணீரைப்போல் வெகு நேரத்துக்குப் பொறுமையுடன் இருக்கமாட்டேன்: அதைவிட நான் பலசாலி; என் கோபத்தைத் தணிக்க எவராலும் கூடாது. என்னை வெளியே போகவிடத் தாமதிப்பீர்களாகில், இந்த அறையின் ஆமைப்பூட்டுகளை அரைநொடியில் ஹதமாக்கி வெளியே போய் விடுவேன்' என்று பயமுறுத்திற்று.

நீராவியின் சேஷ்டை விளையாட்டு.

உடனே என் காது செவிடுபடும்படி கீச்சு சப்தமாய்க் கூச்சல் கேட்டது. நீராவியின் கோபத்தால் உண்டான சத்தமென்று நினைத்தேன். ஆனால் அது சந்தோஷத்தின் மிகுதியால் உண்டானதென்று அப்பால் தெரிந்தது. பிள்ளைகளே நீங்கள் பள்ளிக்கூடத்தை விட்டு வெளியே விளையாடப் போகும் பொழுது உங்களுக்கு மனம் எப்படியிருக்கிறதென்று பார்த்துக்கொள்ளுங்கள். அந்த உற்சாகம் வந்தால் நீங்களும் கீச்சு, வீச்சென்று கத்துகிறதில்லையா? அப்படித்தான் அந்த நீராவியும் உற்சாகம் மேலிட்டுக் கத்திற்று. எப்படியென்றால், நான் முன்சொன்ன துரை இஞ்சின் வண்டியிலிருந்த ஒரு திட்டிவாசலைத் திறந்துவிட்டார். அதின் வழியாய் நீராவி "தப்பினேம் தப்பினேம்" என்று சத்தமிட்டு வெளிப்பட்டது. அந்தத் திட்டிவாசல் உடனே மூடிக்கொண்டது. அப்பால் வேறொரு திட்டிவாசல் திறந்தது; அதின் வழியாயும் நீராவி வெகுவிசையாய் வெளிப்பட்டது. அப்படி வெளியே போகும் ஆவி சும்மா போகாமல் வண்டியின் சக்கரங்களுடன் பொருந்தியிருந்த உருக்குத்தடி † யொன்றை விசைகொண்டு தள்ளித் தள்ளிச் சென்றது. உருக்குத்தடி அசையவே, சக்கரங்களும் நகர்ந்தன. வண்டியும் மெதுவாய் நகர்ந்தது. வண்டி நகர்ந்தபின் தாமதிக்கலாகாதென்று நான் ஓடிப்போய்த் திறந்திருந்த ஓர் வண்டியில் பொட்டென ஏறிக்கொண்டேன். அரை நிமிஷத்திற்கெல்லாம் இஞ்சின் வண்டியும் அத்துடன் சேர்ந்த வண்டித்தொடரும் ஸ்டேஷனைவிட்டு அப்பால் சென்றது. சற்றுநேரத்தில் அவ்வூரும் எங்கள் கண்ணுக்கெட்டாத தூரத்தில் மறைந்து போயிற்று. பக்கத்திலிருந்த மரங்களும் வயல்களும் மாடுகளும் வீடுகளும் எங்களுக்கு எதிர்முகமாய் சிறகுகட்டிப் பறந்தாற்போல் பறந்து கண்ணுக்குக் காணாமல் மறைந்தன.

ஓர் இனிய சம்பாஷணை.

இது இப்படியாக, 'இஞ்சின்' வண்டியிலிருந்து விடுபட்ட நீராவியானது வழிப்போக்கரிடத்தில் விடைபெற்றுப் போவதுபோல, எங்கள் வண்டிகளின் ஜன்னல்கள் வழியே எட்டிப்பார்த்துப் பார்த்துப் பின்னடைந்தது. அப்போது ஓர் மூலையில் 'விவேகசிந்தாமணி' யென்னும் மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகையை வைத்து வாசித்துக்கொண்டிருந்த ஓர் வியாபாரி அந்த நீராவிக் கூட்டத்தைப் பார்த்து, "உங்களுக்கு முன் நான் ஒரு வாரத்தில் செய்யக்கூடிய பிரயாணத்தை இப்போது அரைநாளில் முடிப்பது உங்கள் உதவியாலன்றோ!" என்று சொன்னார். அதற்கு "நாங்கள் உலக சிருஷ்டி முதல் இல்லையா? இப்போது தான் புதிதாய் வந்தோமா என்ன!" என்றது அந்த நீராவிக்கூட்டம்.

வியாபாரி.—"உங்களை விண்ணவராக வருணன் என்றும், மேகராஜன் என்றும் அறிவோம். இப்படி மூட்டைதூக்கி முக்கையனாகவுங்களை நாங்கள் அறிந்ததில்லை" என்றான்.

"இது யாருடைய வேலை? தெரியுமா?" என்று அந்த நீராவிக்கூட்டம் கேட்க, "எந்த

† Piston Rod.

மஹான் உங்களை இப்படி விலங்கிட்டு வண்டியிற்பூட்டினரோ, அறியேம்!" என்றார் அந்த வியாபாரி.

"ஐயோ! இவ்வளவுதானா? அது ஒன்றுமில்லை! ஒரு சிறுபையன் விளையாட்டாகச் செய்தது இப்டி வினையாகவந்து முற்றிற்று." என்றது அந்த நீராவிக்கூட்டம்.

"அவன் யார்?" "ஸ்டீவன்ஸன்" என்பார்கள் அவனை.

"ஒரு சிறுபையன் விளையாட்டாகச் செய்த வேலையா இது! ஒரு பையன் லீலை இப்படியானால் பகவான லீலாவிபூதிக்கு (விளையாட்டு மஹிமைக்கு)க் கேட்பானேன்!" என்று வியாபாரி ஆச்சரியப்பட்டு ஆனந்த பூரிதனானன்.

ஒரு வருஷம் தன் பெற்றோர் முதலியவரையும் பாராமல், சென்னையிலிருக்கும் ஓர் கல்விச்சாலையில் படித்திருந்து நடுவேனில் விடுமுறையில் தன்னூருக்குப் போய்க்கொண்டிருந்த ஓர் சிறுவர் "நீராவிக் கூட்டங்களே! உங்களுக்கு நான் வந்தனம் தந்தேன். இன்று சாயந்தரமே என் பெற்றோர் சிநேகிதர் முதலிய எல்லாரையும் பார்க்க என் னூருக்கு என்னைப் போகச்செய்வீர்களல்லவா!" என்றான்.

உடம்பு மெலிந்து முகம் வெளுத்து இரத்தம் கெட்டு வியாதிப்பட்டு உட்கார முடியாமல் தலையணைமேல் சாய்ந்துகொண்டிருந்த நோயாளி ஒருவன் "என்னை இவ்வளவு சீக்கிரமாய் என் வீட்டிற் கொண்டுவந்து சேர்த்தீர்களே, நீராவித்திரள்களே! உங்களுக்கு நான் என்ன பிரதியுபகாரம் செய்யப் போகிறேன்!" என்று புகழ்ந்து பேசினன்.

இப்புகழ்ச்சியான வந்தன வார்த்தைகளைக் கேட்டவுடன் நீராவிக்குச்சந்தோஷமுண்டாகி "இப்போது தான் எனக்குத் திருப்தி; நான் உடம்பு எடுத்ததற்கு உலகத்துக்கு உபயோகமாகக் கொஞ்சம் உழைத்தேன்" என்றுசொல்லி ஆனந்தத்தின் மிகுதியால் உயர உயர எழும்பிக் குதித்தது. புகைவண்டித் தொடரோவெனில், பின்னடைந்த நீராவியைப்பற்றிய எண்ணமேயின்றி வெகுவிரைவாய் ஓடிவிட்டது. நீராவி செய்த உபகாரத்திற்காக அதற்கு பற்பலர் வந்தனம் கூறிச் சென்றும், அந்நீராவியால் தள்ளுண்ட வண்டியானது சற்றேனும் தாமதித்து அதற்குவந்தனங்கூறிச் சொல்லாமலும், அதைப்பற்றிய எண்ணமேயில்லாமலும் ஓடிவிட்டதைப் பார்த்த நீராவிக்கு அதிக விசனமும் கோபமும் உண்டாகி முகங்கருத்து "பளா! நன்றாயிருக்கிறது!! இவ்வுலகத்தில் நடக்குங் காரியங்கள் இப்படியே! எவ்வளவோ பரோபகார சிந்தையுடன் நாம் ஒருவருக்கு உபகாரஞ் செய்தும் அவர் நம்மை மறந்து போவதாயிருக்கிறது. வெகு நேர்த்தி! என்னையன்றி இப்பெரிய வண்டித் தொடரின் ஓர் அணுவும் அசையுமா? என் உதவியால் அசைந்தோடிய வண்டிக்கு அப்பால் என்னைத் தொட்டென்ன காரியமிருக்கிறது!! . . . . தன்னயம் பாராட்டும் இவ்வுலகத்தில் நானிருப்பதைவிட வேறெங்கேயாவது போய்விடுவது நன்று" என்று சொல்லிக்கொண்டு மேல் லோகத்துக்குப் போயவிட்டது. இங்கேயொரு உபகதை.

---

## THE VICEROY'S BIRTHDAY.

### The Children's Festival.

### ஸ்ரீஹார்டிஞ்ச் ஜயந்தி உபாக்கியானம்.

ஸ்ரீ ஹார்டிஞ்ச் ஜயந்தி கொண்டாடும் குழந்தைகளுக்கு இங்கே யொருவார்த்தை சொல்ல விரும்புகிறோம்.

பிள்ளைகளே! சென்ற மார்ச்சுமாசத்துச் சஞ்சிகையின் முதற்பக்கத்தில் "நமது உபகாரச்சங்கம்" என்று எழுதியுள்ளதை வாசித்துப் பார்த்தீர்களா? இல்லாவிட்டால், உடனே பாருங்கள்! ஜன்மமெடுத்ததற்குப் பிரயோசனம் பரோபகாரம். இதில் எல்லா உபகாரமும் அடங்கும். தேஹ ஸம்ரக்ஷணையும் உழைக்கிறபடி யுழைத்தால் பரோபகாரமே யாகும். எப்படி யெனில், "பூட்டியிட்ட தேஹமிது"

என்றுள்ள விவேகத் தாயின் வாக்கியப்படி நீராவிக்கு ரயில்வண்டி யெப்படியோ, அப்படியே ஜீவனுகிய ஆவிக்கு இந்த தேஹமும் சம்பந்தப் பட்டிருக்கிறது. ஜடாத்மகமாய் ஜட புத்தியுள்ளவர்களுக்கு நன்றியுணரும் சக்தியில்லை. அதனல் நீங்கள் ஜீவோபகாரம் செய்முயற்சி குன்றவேண்டாம். ஜீவனுக்கு நன்றியுணரும் சக்தியுண்டு. பரோபகாரம் செய்வதே ஸமஷ்டிஸேவை. இந்த ஸமஷ்டிஸேவையே பகவான் திருவருளை (கிருபா நோக்கைப்) பெறுவதற்குச் சாதனமாம். ஸமஷ்டிசேவை ஸாதனம் செய்வதென்றால் பரோபகாரம் செய்து பகவான் கிருபைக்குப் பாத்திரமாதல் என்றுதான் அர்த்தமே யன்றி வேறு பிரமாதம் ஒன்றுமில்லை. லார்ட் ஹார்டிஞ்சவர்கள் பரோபகார சிந்தை வாய்ந்தவர். ஆதலால்தான் பகவான் அவரை ஆபத்து வேளையில் காப்பாற்றி அவரால் குழந்தைகளெல்லாம் முன்னுக்கு வரவேண்டுமென்று ஸ்ரீஹார்டிஞ்சு ஜயந்தியையும் ஒரு நித்திய ஸ்தாபனமாக உண்டு பண்ணினர். இந்த வருஷம் ஸ்ரீஹார்டிஞ்சு ஜயந்தியின் பொருட்டு குழந்தைகள் கொண்டாடும் உற்சவம் ஜூன்மீ 22-உக்கு பதிலாக மேமீ 18உ கொண்டாடப் படுமென்று ஸிம்லாவிலிருந்து ஏப்ரல்மீ 29உயில் தந்திசமாசாரம் வந்திருக்கிறது. அன்றைய தினம் ஸ்ரீ கிருஷ்ண ஜயந்தி, ஸ்ரீராமநவமி கொண்டாடுவதுபோல் எல்லாப் பிள்ளைகளும் வீட்டில் விருந்துண்டு 'பரோபகாரம் செய் கோஷ்டி' கூடி உற்சவம் கொண்டாடவேண்டுமென்பது கோரிக்கை. இதை யெல்லாரும் சுத்த மனத்தோடு அங்கீகரித்து அனுஷ்டிப்பார்களென்று பகவானைப் பிரார்த்திக்கிறேம். இனி நீராவிக் கூட்டங்களின் மேல்வரலாற்றைத் தொடுபிடியாய்த் தொட்டுத் தொடர்ந்து சொல்லிக்கொடுபோவோம். "பாலவித்யாஸாதக கோஷ்டி" யென்கிற "Bands of Hope" பள்ளிக்கூடங்கள் தோறும், பள்ளிக்கூட வகுப்புகள்தோறும் ஏற்படுத்த அது வாய்த்தமோர் சுபதினமாகும்.

உலகுய்யத்தன்னைக் கொடுத்தல்.

இதற்குச் சமீபத்தில் என்னூரானதால் ஸ்ரீ ஹார்டிஞ்ச் உபாக்கியானம் கேட்டுக்கொண்டிருக்கையிலே நானிறங்கவேண்டிய 'ஸ்டேஷன்' கிட்டிவிட்டது. நான் அங்கே ரயில் வண்டியை விட்டு இறங்கிவிட்டேன். வீட்டுக்குப் போகும் வழியில் சிறுசிறு நீராவிக் கூட்டங்கள் சில அங்கே வெகு விசனத்துடன் ஒன்றும் பேசாமல் தங்கியிருந்தன. அவைகளைப் பார்த்து "ஏன் விசனப்படுகிறீர்கள்?" என்று கேட்டேன். "பலமுள்ள பெரிய நீராவிக் கூட்டங்களெல்லாம் எங்களை இங்கே விட்டு விட்டு மேலே போய்விட்டன. எங்களால் உயரமாய்ப் பறக்கமுடியாமல் இங்கே இருக்கிறேம்." என்றன. அப்போது நான் "பெரிய நீராவிக் கூட்டங்கள் எங்கே போய்விட்டன?" என்று கேட்டேன். "அதோ மேற்கே பொதியமலை யிருக்கிறது, அதின் உச்சியில் எங்கள் வாசஸ்தானம். அங்கேதான் போயிருப்பார்கள், எங்களுக்கு அவ்வளவு உயரமாய்ப் பறக்க சக்தியில்லை. ஆகையால் இங்கே உட்கார்ந்திருக்கிறேம். நாளைப்பொழுது விடியும்போது பனியாகவும் மூடுபனியாகவும் இப்பூமியின் மேல் விழுந்து நாங்கள் பிராணனை மாய்க்க எண்ணி யிருக்கின்றேம். நாங்கள் இறந்துபோன போதிலும் எங்கள் சரீரம் பயிர்களுக்கும் புற் பூண்டுகளுக்கும் கொஞ்சம் பிராணுதாரமாயிருக்கும். அப்படி உலகத்துக்கு உபயோகமாகும்படியாய் எங்கள் பிராணனை விடுவதால் எங்களுக்கு மோக்ஷம் கிடைக்கும்" என்று சொல்லின.

## MUSINGS IN CLOUDLAND.

### மேகசந்தேகம்.

உலகசுபாவத்தை மாற்றமுடியுமா ?

இதைக்கேட்டு அவைகளின் நல்லெண்ணத்துக்கும் பரோபகார சிந்தைக்கும் மெச்சிக்கொண்டு பெரிய நீராவிக் கூட்டங்களைத் தேடிப்போனேன். பொதியமலைச் சாரலில் அவைகள் இறங்கி யிருக்கக்கண்டு அவைகளின் சமீ

பத்திற் சென்றேன். அப்போது ஒரு மேகம் மற்றவைகளைப் பார்த்து "ஏன் மனஸ்தாபத்துடன் இருக்கின்றீர்கள்? உலகத்தின் இயற்கை நமக்குத் தெரியாதா? உலகத்தோர் தன்னயம் பாராட்டியே யிருப்பர்! அதனுல் நமக்கென்ன?" என்றது. அது கேட்ட மற்ருெரு மேகம் "செய்நன்றி யறியாத மனிதர் இவ்வையகத்தில் மெய்மறந்து திரிகின்றனர். அவர்களுக்கு புத்தி யுண்டாகவேண்டி இந்திரனிட்ட கட்டளைப்படி முன் 'மாதமும்மாரி' பொழிந்து வந்ததை யொழித்து இப்போது வருஷத்துக்கு மூன்றுமழை பெய்கிருேம். இதையும் அவர்கள் அறியவில்லை. செய்நன்றி யறியாமலிருப்பது மாத்திரமோ? உண்ட சோற்றுக் கிரண்டகஞ்செய்வது முதலாகிய எத்தனையோ தீங்குகள் அயலாருக்குச் செய்து வருகின்ருர்கள். இவர்களுக்குக் கடவு ளொருவ ரிருக்கிருர் என்பதை உணர்த்தும்பொருட்டு நாமெல்லாம் இப்போதே ஒன்று சேர்ந்து இவர்கள்மேல் கல்மழையாய் உடனே இறங்கி இவர்கள் 'சொந்தம்' 'சொந்தம்' என்று பாவித்து வருகிற வீடுகளையும் காடுகளையும் சம்பாத்தியங்களையும், நம்மை அவமதித்துச் சென்ற புகைவண்டியையும் ஒரு நிமிஷநேரத்தில் உடைத்துத் தகர்த்துவிடுவோமா? அல்லது நமது பந்துக்களெல்லாரையும் ஒன்றுசேர்த்து ஒரே மட்டாய்த் தரையிலிறங்கி மறுபடியும் ஜலரூபமெடுத்துப் பிரளய முண்டாகச்செய்து இத் துன்மார்க்கரின் பயிர்வகைகளை அழுகச் செய்து நாசமாக்கி அதன் மூலமாகப் பஞ்ச முண்டாக்குவோமா?" என்றது.

செய்நன்றி யறியா மாந்தர்.

இது கேட்டிருந்த மற்ருெரு மேகம் வெகு கோபங்கொண்டு "இந்தப் பாவிகளின் பாவச் செய்கைகளை நாம் பொறுத்திருக்க இருக்க, இவர்கள் அதிகமாகவே பாவம் செய்கிருர்கள். தற்புகழ்ச்சி, தன்னயம் பாராட்டும் குணம் இவைகள் அதிகமாக விர்த்தியாகின்றன. ஆகையால் பனிக்கட்டிக்கு இருப்பிடமான 'ஹிமயமலை' யுச்சியில் நாமெல்லாம் சென்று அங்கே பனிக்கட்டி மலையாய் உரைந்து திடரென்று அம்மலையிலிருந்து அப்படியே பாரை பாரைகளாக வழுவி விழுந்து ஒரேமட்டாய் விந்தியமலைவரையிலும் மத்தியிலகப்பட்ட மனிதர், ஜந்துக்கள், வீடுகள் முதலிய எல்லாவற்றையும் பூமியோடு பூமியாய் அரைத்து அழித்து, அப்பால் விந்தியமலையிலிருக்கும் நமது பந்துக்களையுஞ் சேர்த்துக்கொண்டு மறுபடியும் நழுவி கன்னியாகுமரிவரையும் முன் போலவே பாழாக்கி விடுவோம். இப்படிச் செய்தால் தான் என் மனம் சாந்தப்படும்" என்றது.

விவேக போதனை.

அப்போது மற்ருெரு மேகம் "சீ, சீ, இது சரியல்ல: இப்படிச் செய்தால் கெட்டவர்களுடன் நல்லவர்களும் மாண்டுபோவார்கள். கெட்டவர்கள் மட்டும் சில கப்பல்களில் ஏறி வடசமுத்திரத்துக்கு வருவராயின், அங்கிருக்கும் நமது பாட்டனுருக்குச் சொல்லி சமுத்திரத்தண்ணீரை உரைந்துபோகச் செய்தால் அந்தக் கப்பல்கள் எங்கும் அசைய வழியில்லாமல் அவைகளிலுள்ள ஜனங்களெல்லாம் உணவின்றி மாண்டு போவார்கள்" என்றது.

"நிஷ்காம்மிய கர்மம் செய்வோம்"

இது கேட்டிருந்த மற்ருெரு மேகம் "இதெல்லாம் என்ன சமாசாரம்? வேடிக்கையாய்ப் பேசி விளையாட்டாய்க் காலம்போக்க எண்ணியிருக்கின்றீர்களோ? நல்லது ! நல்லது ! உலகத்தோர் தன்னயம் பாராட்டினுல் நாமும் அப்படியே யிருக்கவேண்டுமோ? ஒருவன் நமக்குக் கேடு செய்தால், நாமும் அவனுக்குக் கேடுசெய்யவேண்டுமோ? இதென்ன! மதியீனம். நம் எஜமானன் நமக்கிட்ட கட்டளையின்படி நாம் "நிஷ்காம்மிய கர்மம் செய்வோம்" என்றது.

அதற்கு மறுமொழியாக மற்ருெரு மேகம்: "இதென்ன இப்படிச் சொல்லுகிருய்? நான் தண்ணீராகும்போது இவ்விராஜதானியில் எல்லாப் பாகங்களிலுமுள்ள மனிதர் என்னை

ஆகாரமாகப் புசித்துவிடுகிறுர்கள். என்னமோ தங்கள் ஜீவன் பிழைக்கவே அப்படிச் செய்கிறுர்கள். அம்மட்டில் சரிதான். ஆனுல், கடப்பை ஜில்லாவுக்கு சமீபத்தில் சில விடங்களில் இம்மனித பூதங்கள் என்னை விழுங்குவதன்றித் தீயினுல் சுட்டுக் காய்ச்சுகிறுர்கள்,* அப்போது எனக்கு சகிக்கக் கூடவில்லை. அதனுல்தான் அவர்களைத் துன்பப்படுத்த வேண்டுமென்று சொன்னேன்" என்றது. அது கேட்டு முன் பேசிய மேகம் "நீ சொல்வது சரியல்ல. எப்படியென்றுல், எல்லா மனிதரும் உன்னைச் சுடாமல் கடப்பை முதலிய சில இடங்களிலுள்ளவர்கள் மட்டும் உன்னை ஏன் சுடவேண்டும்? யோசித்துப்பார்! நீயோ மிகநல்லவன்; ஆனுல் சகவாச தோஷத்தால் கெட்டுப் போகிறுய். நீ மட்டும் சுத்தமாயிருந்தால் உன்னைச் சுடுவார்களா? நீ காடுகளிலும் மலைகளிலும் அலைந்து திரியும்போது வியாதிகொண்ட அநேக துன்மார்க்கருடன் சினேகித்து அவர்களுடன் கலந்து செல்லுகிறுய். அதனுல்தான் உன்னைச் சுடுகிறுர்கள். உன்னைத் துன்பப்படுத்த வேண்டுமென்பது அவர்களுடைய நோக்கமல்ல. ஆனுல் உன்னுடன் கூடியிருக்கும் துன்மார்க்கரைக் கொன்று உன்னைச் சுத்தமாக்க வேண்டுமென்பதுவே அவர்களுடைய கருத்து. இதனுல் உலகத்திலுள்ள மனிதரெல்லாம் மிகவும் நல்லவர்களென்றும், அவர்கள் செய்கையெல்லாம் நற்செய்கைகளென்றும், நல்லகாரணம் பற்றியே எல்லாக் செய்கைகளும் செய்வார்களென்றும், நான் சொல்லவில்லை. நீ யிப்போது சொல்லிக்கொண்ட முகாந்தரம் சரியானதல்லவென்றுதான் நான் சொல்ல வந்தேன்" என்றது.

பரோபகாரமே பரமசிலாக்கியம்.

உடனே யெல்லா மேகங்களும் இப்போது பேசிய மேகத்தைப்பார்த்து "நீ சொல்வது சரிதான். ஆனுல் எங்களை என்ன செய்யச் சொல்லுகிறுய்?" என்று கேட்டன. அந்த மேகம்: "நான் சொல்வதைக் கேளுங்கள். பலனையிச்சிக்காமலும் பிறர் குற்றம் நாடாமலும் நல்லவர் பொல்லாதவர் என்று பாராமலும், நன்மையே செய்யவேண்டுமென்பது நமக்கு எஜமான் இட்ட கட்டளை. அப்படியே ஒரு காரியம் செய்வோம். அதோ பாருங்கள். பயிர்வகைகளெல்லாம் தண்ணீரில்லாமல் வாடியிருக்கின்றன. கோடையின் வரட்சியால் கிணறுகளிலும் தகுந்த ஊற்று இல்லாமல், கவலையால் தண்ணீர் இறைப்பதை விட்டு கிருஷிகர் ஏற்றத்தில் சிறு பட்டைகளைக் கட்டி வேர்வை சொட்டப் பகல் முழுவதும் இறைத்தும் ஐந்தாறு பாத்திகளும் இன்னும் நனையவில்லை. புற்பூண்டுகளெல்லாம் தாய்முகங் காணுத பிள்ளைபோல் மழையை யெதிர்பார்த்திருக்கின்றன. பெரிய மரங்களும் வெயிலின் கொடூரத்தால் பட்டுப்போகின்றன வென்றுல் புற்பூண்டுகள் உலர்ந்து போவதற்குச் சொல்லவும் வேண்டுமோ? ஆகையால், இவைகளுக்கேதாவது உபகாரம் செய்ய யோசிப்போம்!" என்றது.

வான்மாரி - அமிருத வருஷம்.

உடனே மேகங்களெல்லாம் ஆகாயத்தில் பரவி தீக்ஷண்ணியமான சூரியகிரணங்களை மறைத்துப் பயிர்களுக்கும் புல்தரைகளுக்கும் குடைபிடித்தது போல் குளிர்ந்த நிழலைக்கொடுத்தன. இதனுல் புற்பூண்டுகளும் பயிர்களும் வெகு நன்றியறிதலுடன் மேகங்களை ஏறெடுத்துப் பார்த்து புன்சிரிப்புக்கொண்டன. புஷ்பங்கள் சந்தோஷமாய் மலர்ந்தன. இதைப் பார்த்தவுடன் மேகங்களுக்கு அவைகளிடம் இரக்க முண்டாகி மழைத்துளிகளாக மாறி அவைகள் மேல் இறங்கின. சூரியன் தன் கொடுமையைக் காட்டி மேகத்தையும் மழையையும் சிதறச்செய்யப் பிரயாசைப்பட்டும் முடியாததால் கோபங்கொண்டு கர்ச்சித்து இடியுண்டாக்கினுன். மழையோ அதற்கு அஞ்சவில்லை. நிலங்குளிர மழை பெய்தது. கிருஷிகர் 'இந்த ஈரம் உழப் போதும்' என்றனர்.

* இந்தப் பாகங்களில் நல்லதண்ணீர் கிடைப்பதில்லையாதலால் விஷசுவரத்திற்குத்தப்பத் தண்ணீரை கொதிக்கக்காய்ச்சிக் குடிப்பது வழக்கம்.

தவளைகள் ஒன்று சேர்ந்து 'குறவை' யிட்டன. நீர்வாத்துக்கள் மழைத்தண்ணீரில் மூழ்கி மூழ்கி விளையாடிக்கொண்டிருந்தன. காக்கைகள் எல்லாம் தங்கள் தங்கள் சிறகுகளை உதறி உலர்த்திக்கொண்டு கா-காவென இங்கும் அங்கும் ஓடித்திரிந்தன. குளங்களிலிருந்து ஓடைகளில் எதிர்த்து ஏறிவரும் சிறு மீன்கள் ஓடைகளில் மழைத் தண்ணீர் குறைந்துபோக நீந்திப்போக முடியாமல் அங்கங்கே நின்று போயின; அவைகளைக் காக்கைகள் தம் இனத்தைக் கூவியழைத்து எல்லாம் பங்கிட்டுத் தின்பது வெகு விநோதமாயிருந்தது. மனிதர் புஞ்சைப் பயிர்கள் விதைக்கும் பொருட்டுக் கூட்டங்கூட்டமாய் மாடுகளை யோட்டிக்கொண்டு கலப்பைகளைச் சுமந்து சென்றார்கள். இப்படி எங்கே பார்த்தாலும் நிரம்பவும் சந்தோஷமுண்டாயிருந்தது.

நீரோட்டம் - வாய்க்கால்.

பூமியில்விழுந்த மழைத்துளிகளோவெனில்: அனேகம் ஒன்று சேர்ந்து சிறு சிறு ஊற்றுக்களாகி ஓடின. மண்ணின்மேல் உள்ள அழுக்கும் அசங்கியமும் கரைந்து சுத்தமாயிற்று; கல்லினுள் வசிக்கும் தேரைக்கு ஜீவன் வந்தது. சில ஊற்றுக்கள் மண்ணில் ஊறியும் கற்பிளவுகளில் இறங்கியும் கிணறுகளில் ஊற்றுக்கண்களுக்குச் சென்றன. பல ஊற்றுக்கள் ஒன்று சேர்ந்து சிறு ஓடையாயின. இவ்வோடையின் ஓரத்திலிருக்கும் செடி கொடிகள் செழிப்படைந்தன. ஓடையானது மரஞ்செடி யடர்ந்த சில திட்டுகளைச் சுற்றியோடி வருவதை நான் பார்க்கும்போது ஒரு வேளை அது மறைந்தும், ஒருவேளை காணப்பட்டும் ஓடிவருவதால் அது 'கண்ணாமூச்சு' விளையாடுவதுபோ லிருந்தது. முன் தொட்டியில் அடைபட்டிருந்தபோது தண்ணீர் சொன்னது போல் புஷ்பங்கள் அவ்வோடையை முத்தமிட்டன. பக்ஷிகள் தங்கள் பேடுகளுடன் மறுநாட் காலையில் அவ்வோடைக்குச் சென்று சிறகுகளை யடித்துக்கொண்டு சந்தோஷமாய்க் குளித்தன. ஓடையும் இப்படி உல்லாசமாய் நடந்துவரும்போது, சமீபத்தில் மற்றொரு ஓடை வருவதைக் கண்டு "தற்காலத்து ஜனங்கள் ஒற்றுமையினாலுண்டாகும் பயனை அறியவில்லை: நாம் நம்மினத்துடன் சேர்ந்திருந்தோமானால் நமக்கு அதிக பலம் உண்டாகும்" என்று நினைத்து அதனுடன் சேர்ந்து வாய்க்கால் ஆயிற்று. அதில் அனேக ஜனங்கள் ஸ்நானம்பண்ணி தாகத்துக்குத் தண்ணீர் எடுத்துப்போக சிலர் அதில் துள்ளி விளையாடும் மீன்களை வலை வீசிப் பிடித்துப் போவதையும் பார்த்தேன்.

நீர்நிலை - குளம்.

சற்றுதூரம் இந்தக்கால்வாய் சென்றவுடன் அங்கே ஒரு பள்ளத்தாக்கு இருந்தது. அதில் வாய்க்கால் சென்று நிறைக்க அது குளம் ஆயிற்று. கோடைகாலத்துக்கு தாகத்துக்கு உபயோகிக்கும் இத்தண்ணீரில் அனேக ஜனங்கள் 'கால்கழுவி, அழுக்கு வஸ்திரங்களைத் துவைத்து ஸ்நானம்பண்ணி அசங்கியப்படுத்திக்கொண்டிருந்தார்கள். அப்போது அந்தத் தண்ணீர் "ஐயோ! நான் சந்தோஷமாகச் சுயேச்சையாய்க் காலங்கழிப்பதை விட்டு, இம்மனிதருக்குக் கோடைகாலத்தில் உபயோகப்படும் பொருட்டு இவ்விடத்தில் அடைபட்டிருப்பதை உணராமல், இவர்கள் இப்படி யென்னை அசங்கியப்படுத்துகிறார்களே! வர வர இவ்விந்துக்கள் தங்கள் 'மனுதர்மசாஸ்திரத்'தையும் மறந்துபோனார்களோ! நான் ஓடிக்கொண்டிருக்கும்பொழுது ஒருவேளை என்னை அசுத்தப்படுத்தினாலும் போகிறதென்னலாம். நான் ஓரிடத்தில் நிலைபடைந்தபின் என் மேல் துப்புவதும், அழுக்கு வஸ்திரங்களைப் போடுவதும் மெத்த அநீதியன்றோ? இவர்களுக்கு எப்போதுதான் புத்தி வருமோ, நாராயணா!!' என்று மிக வருத்தத்துடன் கிலேசப்பட்டுக் கொண்டிருக்கையில், சில பள்ளர் வந்து குளத்தின் மடையைத் திறந்துவிடவே "நன்று, நன்று; பயிர்களுக்கு மத்தியில் சந்தோஷமாய்ப் பாய்ந்து விளையாடலாம்" என்று சொல்லிக்கொண்டு, தண்ணீர் ஓடிற்று.

நீரோட்டத்தாலாகும் இதர வேலைகள்.

இப்படி வயல்களுக்கு ஊடேபோன ஓடை வயல்களில் பாய்ந்தபிற்பாடு, முன் தான் விட்டுப்பிரிந்த வாய்க்கால், அருகில்வர, சம்பத்துடையவர் தம்மினத்தாரில் வறுமை யடைந்திருப்பவர்களைக் கண்ணெடுத்தும் பாராமல் தள்ளிவிடுவதுபோலல்லாமல், அது தன்னுடன் சேர்த்துக்கொண்டது. கொஞ்ச நேரத்தில் வாய்க்கால் சற்று தூரம் சென்றவுடன், அங்கு ஓர் அணை கட்டியிருக்கக்கண்டு, அது நூல்நூற்கும் யந்திரத்தின் சக்கரத்தைச் சுற்றுவதற்காகச் செய்திருந்த தந்திரமெனத் தெரிந்து, அந்தச் சக்கரத்தின்மேல் பாய்ந்து தள்ளிச் சற்று இயந்திரத்தை ஓட்டுவித்து அனேகமாயிரம் ஜனங்கள் செய்யும் வேலையைத் தானே செய்துமுடித்து அப்பால் அவ்வழியே சில நாள் போய்க்கொண் டிருக்கையில் இன்னொரு கால்வாயைக் கண்டது. இரண்டு கால்வாய்களும் சினேகமாய்ச் சேர்ந்து நதியாகி, "இப்போது மனிதருக்கேதாவது உபகாரம் செய்யலாமா" வென யோசித்தது. அங்கே நானாவிதமான சரக்குகளை ஒரு ஊரிலிருந்து மற்றொரு ஊருக்குக்கொண்டு போவதற்காகச் செய்யப்பட்ட பெரிய கப்பல்கள் பாய்விரித்து நிற்பதைப் பார்த்து, அக்கப்பல்களைச் சுமந்து சென்று திரும்பவும் அவைகள் இருப்பிடம் சேர்த்தபின், அவ்வழியாய்ப் போய்க்கொண்டே யிருந்தது. ஒருநாள் சற்று கவலையீனமாய்க் கொஞ்சதூரம் போகவே வழிதெரியாமல் தடுமாறி சமுத்திரத்தில் விழுந்து விட்டது.

நதியுண்ட கடலில் நீருண்ட மேகம்.

ஐயோ! பாவம்! ஜனங்களுக்கு இவ்வளவு பிரயோஜனமாயிருந்த நதியின் கெதி இப்படியாயிற்றே யென்னும் துக்கத்துடன் நான் என் வீட்டுக்கு வந்து சேர்ந்தேன். அதன்பின் சில நாட்கழித்துப் போய்ப் பார்த்தும், சமுத்திரத்தில் விழுந்தநதி திரும்பக் கரையேறப் பார்க்கவில்லை. ஆனால் அங்கு நின்றவர்களில் ஒருவர் "சூரியன் வித்தை செய்வதில் கெட்டிக்காரன்; அவன் சமுத்திரத்தில் விழுந்த நதியைப் புயல்காற்றுடன் மேகங்களிலேற்றி மலைகளுக்குக் கொண்டுபோகிறான்" என்றார். "அப்படியானால் என்கண்ணுக்குத் தெரியவில்லையே." என்று சொன்னேன். அதற்கு அவர் "நீ உன் வீட்டில் ஒரு பாத்திரம் நிறையத் தண்ணீர் வார்த்து சூரியனுக்கு முன்பாக வைத்திரு; சிலநாள் சென்றபின் சூரியன் செய்யும் வித்தை உனக்குத் தெரியும்" என்று சொன்னார். அவர் சொன்னபடியே வைத்தேன். ஒரு வாரத்தில் பாத்திரத்தில் தண்ணீரே இல்லை. அது எப்படி காணமற் போயிற்றென்றும் எனக்குத் தெரியவில்லை.

சினேகிதர்களே! நீங்கள் சொல்லமாட்டீர்களா?

உங்கள் அன்புள்ள,

பட்டண்ணா.

---

## CIVILIZATION AND SOCIAL SERVICE.

### யதார்த்த நாகரிகம்: சமஷ்டி சேவை.

வாஸ்தவமான நாகரிகம் காயபலம், புத்திபலம், ஆத்மபலம் அதிகரித்தலிலும், சரீரசுகம் ஹிருதயசுகம், புத்திசுகம் அடைவதிலும், இவைகட்கு வேண்டிய புத்தி அபிவிருத்தியும் சாஸ்திர அபிவிருத்தியும் கைத்தொழில்களும் வியாபார முறைகளும் விஸ்தாரமாயுண்டாவதிலும், சமுதாய ஏற்பாடுகள் பரிஷ்காரப்பட்டு ஜனங்களுடைய முயற்சிகள் வீண்வழியிற்செல்லாமல் சுகம் விளைவிக்கத்தக்கதும் துக்கம் நிவிர்த்திக்கத் தக்கதுமான வழிகளிற் செல்வதிலும், ஜனங்களுடைய ஆவசியங்கட்கும் உபயோகங்கட்கும் அனுசரணையாய்ப்

பிரகிருதியிலுள்ள பலவகைசக்திகளை வசப்படுத்துவதிலும், அவைகளை ஒரு முகப்படுத்தி பிரவிருத்திக்கும் பொருட்டு யந்திரங்கள் சிருஷ்டிப்பதிலும் அடங்கியிருக்கிறது; அதாவது சுருக்கிச்சொல்லுமிடத்து வாஸ்தவமான நாகரிகமானது அதிகமான ஜனங்கட்கு அதிக க்ஷேமத்தை யுண்டுபண்ணுவதில் நிற்கிறது. இது சமஷ்டிசேவை சாதனத்தாலன்றிச் சித்திக்காது.

யதார்த்த நாகரிகம்—உத்தம சரீரப்பெறல், காயபலம் வளர்த்தல், சரீர சம்ரக்ஷணம் செய்தல், உத்தமசந்ததி ஜனிப்பித்தல், ஊருக்குழைத்தல், அதாவது, பரோபகார சிந்தையோடு பாடுபட்டுழைத்தல்.

சமுதாய நிலைமையடைந்த ஜனங்கள் நாகரிகரென்ற பெயர் பெறவேண்டுமானல் தத்தம் சரீரத்தை ஒழுக்க விசேஷத்தால் உத்தமமாகச் செய்துகொள்ளு முறைகளும், காயபலம் வளர்க்கும் முறைகளும், கர்ப்பத்தில் ஒட்டிய வியாதி நிவிர்த்தித்து தானுய் வியாதி வராமற்றடுத்து, வந்த வியாதியைப் போக்கும்படியான முறைகளும், சரீரக்ஷயமும் துர்பலமும் பல்வகை உத்பாத அவலக்ஷணங்களும் இல்லாத சுபலக்ஷண சுகுணம்பொருந்திய சந்ததிகள் உண்டாகும் விவாகமுறைகளும் சம்பந்த முறைகளும் பரிஷ்காரமாய்த் தெரிந்திருக்கவேண்டும். அவைகட்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யவேண்டும்.

நம்மவர் மந்தகதி.

விவேக சிந்தாமணியில் ஹிந்துக்களின் க்ஷய கதிகளைப்பற்றி எழுதியிருப்பதிலிருந்து இப்பேர்ப்பட்ட முறைகள் எம்மட்டில் மங்கிப்போய் ஜனங்கள் கெட்டுப்போகிறார்களென்றும் அநாகரிக ஸ்திதிக்கு வருகிறார்களென்றும் காணலாம். தற்கால நாகரிகம் கொண்டாடும் ஜனங்கள் முற்காலத்தில் நமது ரிஷீசுவரர்கள், சித்தர்கள் எழுதிவைத்திருக்கும் வைத்திய கிரந்தங்களைக் காட்டிலும் புதிதாக என்ன புஸ்தகம் எழுதியிருக்கிறார்கள்? ஆபரணங்கள் நாகரிகச் சின்னமாக மதித்துச் சென்ற 30 வருஷத்திற்குள் 300 கோடி ரூபா ஆபரணத்தில் அழித்திருக்கும் தற்கால நாகரிக மகான்கள் முன் கண்டுபிடித்திருக்கும் மூன்று லக்ஷம் ஔஷதிகளைக் காட்டிலும் ஒரு மூலிகையாவது புதிதாய்க் கண்டு பிடித்திருக்கிறார்களா? மேற்கண்ட மூன்றுலக்ஷம் மூலிகைகள் இன்னவை யென்றாவது அறிந்திருக்கிறார்களா? அங்கிலேயர் முதலிய வெள்ளைக்காரர் அபிவிருத்தியாகி வருவதாய்ச் சொல்லலாம். அதனால் ஹிந்துக்களாய நமக்கென்ன பிரயோஜனம்? பின்னலான வியாதிகட்கு அங்கிலேய வைத்தியம் தலைகுனிவதேயன்றி அவைகளை வெற்றிபெறக் காணேமே. கொல்லைகளிலும் வயல்களிலும் தோட்டங்களிலும் காடுகளிலும் உண்டாகும் புற்பூண்டுகளைச் செலவின்றி சம்பாதித்து எளிதில் எல்லோரும் தெரிந்துகொண்டு சுகமாய் நிவிர்த்தி செய்யும்படியான வழிகளை மறந்து கேவலம் செயற்கைமுறையாகவும் அதிகச் செலவுள்ளதும் நமக்கு ஒத்துக்கொள்ளாததுமான அந்நியமுறைகளைக் கைக்கொள்வதால் நமக்கென்னலாபம்? வருஷாவருஷம் வாரிக்கொண்டுபோகும் வாந்திபேதி, ஜ்வரம், அம்மை முதலிய கொள்ளைநோய்க்கு என்னமருந்து புதிதாகவும் உடன்கேட்கத் தக்கதாகவும் கண்டு பிடித்திருக்கிறார்கள்?

யதார்த்த நாகரிகம் : புத்தியபிவிருத்தி.

தெரிவாக ஊர்வன பறப்பன நடப்பன செயற் கொண்டிருப்பனவாகிய ஜீவஜடங்களில் மனுஷிய ராசிக்கு விசேஷத்துவம் புத்தியினால் தான். அவ்வாறு ஜீவகோடிகளில் விசேஷத்துவத்திற்கு காரணமாகி யிருக்கிற புத்தி எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாகிறதோ அவ்வளவுக்கவ்வளவு நாகரிகம் அதிகம். புத்தி அபி

விர்த்திக்குத் தகுந்தபடி பலதேசத்துப் பலவகைஜனங்கள் பற்பல நாகரிகப்படியிலிருப்பார்கள். புத்திவிசாலத்தால் நாகரிகம் மதிக்கப்படவேண்டுமே யல்லாமல், ஆபரணப் பெருக்கின் மேலாவது அவிவேக சமூகத்தாலாவது நாகரிகம் நிதானப்படுத்தப்படுவதாயிருந்தால், அமெரிக்கா ஆபிரிக்கா முதலிய கண்டங்களிலுள்ள காட்டு ஜனங்கள் எவ்வளவோ மேன்மையடைந்திருக்கும் வெள்ளைக்காரரைப் பார்க்கிலும் நாகரிகமுள்ளவர்களென்றே சொல்லவேண்டிவரும். வஸ்திரம் செய்ய அறிவில்லாமல் இலைகளையும் கிளைகளையும் தோல்களையும் அணிந்து, மீன்களையும் பக்ஷிகளையும் கொன்று சுடாமல் தின்று, மரத்தடியில் தங்கி, கொங்காணிபோல் மாற்றக்கூடிய குடிசைகளில் பதுங்கி, மேலெல்லாம் எலும்பும் கல்லும் உலோகங்களும் அணிந்து, தலைகளில் இறகுகள் சொருகி, கிலுகிலுக்கும் மணிகள் சலங்கைகள் இடுப்பிலும் காலிலும் அணிந்து, உடலெல்லாம் சாயப்பூச்சுப் பூசி தீர்க்கவிசாரமில்லாத காட்டுஜனங்களை அங்கிலேயர் முதலிய வெள்ளைக்காரர், இந்துக்கள், இவர்களைப் பார்க்கிலும் எப்படி நாகரிக முள்ளவர்களென்று கூறுகிறது?

புத்தி விருத்தியடைய வேண்டுமானால் சாஸ்திரம் நாளுக்கு நாள்* சாகோபசாகையாய் விரிந்து மேலோங்கி ஆகாயமண்டலம் வரை முட்டவேண்டும். சாஸ்திரரூபம் புத்தி அபிவிர்த்தி புலப்படவேண்டு மேயல்லாமல் மற்றெவ்விதத்தில் புலப்பட்டாலும் குணகரமாகவும் தீர்க்ககாலம் நிற்கக்கூடிய தாகவும் இருக்காது. தர்க்கசாஸ்திரம், அங்ககணிதம் பீஜகணிதம், க்ஷேத்திரவிவகாரம் முதலிய கணிதசாஸ்திரங்கள்; பூகோள சாஸ்திரங்கள்; பிரகிருதிசாஸ்திரங்கள்; வான சாஸ்திரங்கள், எந்திரசாஸ்திரங்கள்; அக்னி, ஜலம், வாய்வு; ஜோதிஸ் இவைகளின் சாஸ்திரங்கள்; தனி பதார்த்தங்கள் சேர்க்கைப்பதார்த்தங்களாகவும், சேர்க்கைப்பதார்த்தங்கள் தனிப்பதார்த்தங்களாகவும் செய்யக்கூடிய முறைமை விளக்கும் ரசாயனசாஸ்திரங்கள்; சரீரசாஸ்திரங்கள்; வைத்திய சாஸ்திரங்கள்; ஸஸ்ய சாஸ்திரங்கள்; ஜீவசாஸ்திரங்கள்; தத்வசாஸ்திரங்கள்; தர்ம்ம சாஸ்திரங்கள் நாளுக்குநாள் விஷயம் வெளிப்படுவதுக்கேற்ப * சாகோபசாகையாய் விரிந்து வியாபகமாகவேண்டும். அதுபோலவே பல

ஆவசியகங்கட்குத் தகுந்தபடி பலபூதாம்சங்களைக் கொண்டு நடத்தக்கூடிய பல எந்திரங்கள் நிர்மிக்கப்படவேண்டும்.

யதார்த்த நாகரிகம்: ஆத்மபரிசுத்தி.

எவ்வகைப் பயிற்சியும் எவ்வகை உழைப்பும், மனோசுத்தியும் வாக்குசுத்தியும் கிரியாசுத்தியும் அடைவதற்கேயாகையால், எவ்வகை நிர்ப்பந்தத்திலும் எவ்வகைக் கஷ்டத்திலும் மனோவாக்குக்காயங்களைச் சுத்தமாய் வைத்திருக்கும் திடச்சித்தமும் திடப்பிரவிருத்தியும் நிலைப்படவேண்டும். இவ்வாறு நிலைப்படுவது தான் நாகரிகக் கொடுமுடி. கர்மபாசத்தில் அகப்பட்டு வாக்கு மனம் செய்கை இவைகள் வெவ்வேறாகப் போகவிட்டு ஆத்மரக்ஷை தேடாமல் ஆபரணாலங்கிருத முதலிய அற்ப சுகங்களை நாடி வாணாள் கழிப்பதைப்பார்க்கிலும் ஆத்மரக்ஷைதேடுவது பூஜிதமென்பதற்குச் சந்தேகமில்லை. பதவி வித்தியாசத்தால் கர்ம்ம வித்தியாசம் புலப்படுவதால் தீர்க்ககாலத்தில் பலிதப்படக்கூடிய ஆத்மசுத்திதேடாமல் தீர்க்க காலத்தில் துன்பம் விளைக்கக்கூடிய காரியங்களையும் அதர்மங்களையும் ஆபரணாலங்கிருத முதலிய அற்ப மோக நிமித்தம் செய்வது கூடாது. வரப்போகிற காலத்தின் அள

* (சாகை = Branch of a tree = மரக்கிளை: உபசாகை = Sub-branch = உபகிளை) கொம்பும் கிளையுமாய்.

வை உத்தேசித்து ஒரு ஜீவகாலம் ஒரு விநாடி யாகக்கூட நினைப்பதற்கு யோக்கியதை யில்லாதபடியால் இந்த அற்பகாலத்தைக் கருதி வருங்காலத்தை உபேக்ஷிப்பது கடுகைக்கருதி பிரம்மாண்டத்தை யிழப்பதொக்கும். ஆத்ம சுத்தி ஆத்மரக்ஷை இவைகட்கு அனுசரணை யாயுள்ள லௌகிகப் பிரவிருத்திகள் நடக்க வேண்டுமே யல்லாமல் விருத்தமான பிரவிருத்திகள் நடக்கக் கூடாவாம்.

யதார்த்த நாகரிகம்: சரீரசுகம்.

பசியால் வருந்துவதற்கும் நாகரிகத்திற்கும் சம்பந்தமில்லை. ஆபரணம் நாகரிகமென்னும் மகா சித்தாந்தத்தை அனுசரித்து நாகரிகங் கொண்டாடும் நாம் முதலெல்லாம் ஆபரணத்தி லிட்டு பசியால் கஷ்டப்படுவோமாகில் நம்மை யாராவது நாகரிகமாய்ப்பட்டினி கிடக்கிறதாய்ச் சொல்லுவார்களோ? மேற்கண்ட சித்தாந்தப்படி நாகரிகமாய் க்ஷுத்பாதை யடைவதைப் பார்க்கினும் அநாகரிகமாய்ப் பசியாற உண்பதல்லவா சுகம்? உள்ள முதலெல்லாம் ஆபரணத்திலிட்டு சுயங்கிருதானர்த்தம் வருத்திக் கொள்ளாமல் நிர்வாகமின்றி, எவ்வளவு பாடுபடத் தயாராக இருந்தாலும் வழியில்லாமல் கஷ்டப்படுபவர்களை அநாகரிகமுள்ளவரென்று சொல்லத்தகாது. நாகரிகமாக ஆபரணத்தில் முதலிட்டுவரும் நாம் யாதொரு கஷ்டப் படாமல் மூன்றுவேளையும் சாப்பிட்டு சுகமடையக்கூடிய வழிகளிருக்க, அவ்வழிகளில் முதலிட்டு சுகமடையாமல் அரைப்பட்டினி முக்காற்பட்டினி யாகக் காலத்தைத் தள்ளுவோமானால் நம்மை எப்படி நாகரிகமுள்ளவரென்று சொல்லுகிறது.

நாகரிகம் மூன்றுவேளை பசியாற்றுவதுமல்லாமல் சுகபோஜனமுமடைவதாம். நாகரீகமற்ற காட்டுஜனங்களைப்போல வெந்ததும் வேகாததுமாய் ஓரிரண்டு ரசத்தோடு சாப்பிடுவதைப் பார்க்கினும், ஷட்ரசங்களோடுபோசனைத் திரவியங்கள் கலந்ததாக விதத்திற்கு விதஞ் செய்து சாப்பிடுவதே நாகரிகமாம். மலையாள தேசத்தில் உணவு பதார்த்தங்கள் எவ்வளவோ சுருக்கமாகவும் அவைகளைச் செய்யும் விதமும் எவ்வளவோ தாழ்ந்தபடியாகவு மிருக்கிறது. அவ்விடத்தில் பக்ஷணமாகச் செய்ய வேண்டுமானால் தோசை, சேவை, முறுக்கு, தேங்குழல், சீடை, வடை இவைகள் செய்யத்தெரியுமே யல்லாமல் விசேஷமாக வொன்றும் தெரியாது. அடுத்தாற்போல மதுரை, திருச்சினாபள்ளி, தஞ்சாவூர் முதலிய ஜில்லாக்களில் பக்ஷணங்கள் எவ்வளவோ வகை செய்கிறார்கள். இந்த மலையாளத்தை உத்தேசித்து மேற்படி ஜில்லாக்கள் வெகு நாகரிகமென்றே சொல்லவேண்டும். ஷட்ரசங்களிலும் புதிது புதிதாகவும் மனோகரமாகவும் எவ்வளவுக்கெவ்வளவு விதம்விதமாய்ச் செய்கிறோமோ அவ்வளவுக்கவ்வளவு நாகரிகம் அதிகம் தற்காலத்தில் ஆபரண ஆசையால் போசன சுகம் கெட்டிருப்பதைப்பற்றியும் பக்குவ முறை கெட்டிருப்பதைப்பற்றியும் இவ்விடம் சூசிக்கலாமேயன்றி விஸ்தரிக்க அவகாசமில்லை. தற்காலத்தில் பக்ஷணவகைகள்புதிதாகச்செய்கிறோமென்ற பெருமை சில ஜில்லாக்களில் ஜனங்கள் அடைகிறார்கள். இது நூறுவருஷத்திற்குமுன் மகமதிய அரசாட்சியின் நிர்ப்பந்தத்திற்கு உட்பட்டு கொள்ளைக்காரருடைய பயத்தின்மேல் சமைத்துவைத்த அடிசிலைச் சாப்பிடலாமென்ற நிச்சயங்கூட இல்லாமல் அடிவயிற்றில் நெருப்பைக் கட்டிக்கொண்டு கள்ளர் பயத்திற்காகச் சமைத்த ஆகாரத்தைப்பானையோடு பூமியிற்றோண்டிப் புதைத்து பந்தோபஸ்து செய்துவந்தகாலத்தை உத்தேசித்து நாகரிகமென்று சொல்லலாம். ஆனால் தற்காலத்தில் புதிதாகச் செய்துவரும் பக்ஷணங்களெல்லாம் வெகுகாலத்திற்குமுன் ஏற்பட்ட நளபாகம், வீமபாகம் என்ற பக்குவ

சாஸ்திரங்களில் உட்பட்டிருக்கின்றன. அச்சாஸ்திரங்களிலுள்ள முறைகள் பூரணமாய் இன்னு மனுஷ்டானத்திற்கு வரவில்லை. அவைகளைக்கடந்து இதுவரை புதிதாக ஒன்றும் கண்டுபிடிக்கவுமில்லை. அம்முறைகளின்படி நடக்கவேண்டுமானால் திரவியபுஷ்டிவேண்டும். க்ரற்படி அரிசிக்குத் தகுந்த "கேசரீபாத்" செய்யவேண்டுமானால் குறைந்தது ஐந்து ரூபாய் செல்லும். அப்படியிருக்க நளபாகம் பீமபாகம் என்னும் சாஸ்திரங்களேற்பட்ட நம்முன்னோர்கள் காலத்தை யுத்தேசித்து தற்காலம் அநாகரிகமென்றே சொல்லவேண்டும்.

நாகரிகம் சுகபோஜனம் அருந்துவதன்றிச் சுகந்தாதிகள் அனுபவிப்பதும் சரீரசுகமாகையால் அதுவும் ஓர்வகை நாகரிகம்தான். வராகசம்மிதையில் புஷ்யஸ்நானம் வாசனைத்திரவியம் இவைகளைப் பற்றிய அத்தியாயங்களைப் பார்த்தோமானால் நம்முடைய முன்னோர்கள் சுகந்தாதிமூலமாய் எவ்வளவு சரீர சுகமடைந்திருக்கிறார்களென்று விளங்கும். தற்காலத்தில் ஆபரணப்பெருமை யிருந்தாலும் புதிதாக ஓர் முறையாவது கண்டுபிடித்ததாக எவனாவது விரல் மடக்குவானா? மதுரை முதலிய சில ஜில்லாக்களில் புஷ்பம் லேபனம் முதலிய சுகந்தாதி யனுபவங்கள் ஜனங்களடைவது வாஸ்தவமே. ஆனால் பசிப்பிணிக்குட்பட்டு சுகபோஜன மில்லாமல் நாக்குச்செத்து சுகந்தாதிகள் அனுபவிப்பது நாகரிகமன்று.

நல்ல ஆடையுடுத்தல் சரீரசுகமாகையால் நல்ல ஆடைநெய்யக்கூடிய நெசவுதொழில்கள் பலமாய் ஏற்பட்டாலல்லாமல் நாகரிகமென்று சொல்லுவதற்கிடமில்லை. ஐம்பது வருஷத்திற்கு முந்தி ஜனங்கள் உடுத்திவந்த வஸ்திரங்களைப்பார்க்கிலும் இப்போது ஜனங்கள் உடுத்திவரும் வஸ்திரங்கள் நாகரீகந்தான். ஆனால் முன்னோர்கள் செய்துவைத்த கருவிகளைக் கொண்டு தற்காலத்தில் யாதொன்றும் புதிதாய்க் கண்டுபிடிக்காமல், அங்கிலேயர் முதலிய அந்நியதேசத்தார் புதிதாய்க் கண்டுபிடித்த எந்திரங்கள் மூலம் நூற்றுவரும் சுகமான நூல்களை விலைக்கு வாங்கி வஸ்திரங்கள் நெய்கிறோமேயல்லாமல் நாமாகச் செய்வதொன்றில்லை. ஆபரணத்தில் முதலிட்டு நாகரீகம் கொண்டாடும் நாம் அன்னிய தேசத்தாரால் நம்முடைய நெசவுதொழில் கீழ்மாண்டு போகும்படி வந்திருக்கும் நிர்ப்பந்தத்திற்குப் பரிகாரமாக என்ன ஏற்பாடு செய்திருக்கிறோம்?

சுத்த ஆடை சரீரசுகமாகையால் அது நம்முடைய நெசவுகாரன் மூலங்கிடைத்தாலென்ன அன்னிய தேசத்தார் மூலங்கிடைத்தாலென்ன வென்று கேட்கக்கூடும். இது இந்துதேசம் உத்தேசித்து கேட்கக்கூடிய சரியான கேள்வியல்ல. வஸ்திரங்களுக்கு வேண்டிய பருத்திமுதலிய சரக்குகள் உற்பத்தியாகாததும் அப்படி உற்பத்தி யாகப்பட்ட தேசங்களிலிருந்து விலைக்குவாங்கி நெசவு, தொழில் நடத்துவதால் நஷ்டம் வரத்தக்கதுமான சீமைகளில் அன்னியதேசங்களிலிருந்து வஸ்திரங்கள் வருத்துவது அநாகரிகமன்று. ஆனால் நம்முடைய தேசத்தவர்களுக்கு வேண்டிய முக்கியமான சரக்குகள் நம்முடைய தேசத்திலுற்பத்தியாக அவையெல்லாம் அன்னியதேசத்திற்கனுப்பி அவர்களால் செய்து வந்த வஸ்திரங்களைக் கிரகிப்பதாயிருந்தால், ஷட்ரசங்களோடு எல்லாவிதத்திலும் சுகபோஜனமடையக்கூடிய பதார்த்தங்கள் புஷ்டியாக வரும்படியிருந்தும் அவ்வாறு செய்து சாப்பிடச் சக்தியின்றி அன்னியதேசங்களுக்கு பதார்த்தங்களை அனுப்பி பக்ஷணங்களாகச் செய்து வருத்தி சாப்பிடுவதற்கு சமமாகும். 7,000 மைல் தூரத்திலிருக்கும் நம்முடைய தேசத்திலிருந்தும், 4,000 மைலுக்

கப்பாலிருக்கும் அமேரிக்கா கண்டத்திலிருந் தும் பஞ்சுவருத்தி எந்திரங்களால் நூலாகவும் வஸ்திரங்களாகவும் சரக்குசெய்து நம்முடைய இந்துதேசம் முழுமையும் பரப்பி திரவியஞ் சம்பாதிக்கும் அங்கிலேயர் நாகரிகமுள்ளவர் களா? நாம் நாகரீகமுள்ளவர்களா?

பூமியின் சுற்றளவு 25,000 மைல். இவ்வளவு சுற்றளவுள்ள பூமிமுழுவதும் மாஞ்சஸ்டர் பட்டணத்தில் ஒருநாள் நெசவாகிற வஸ்திரங் கொண்டு மூடிவிடலாமென்று கணக்கிடப் பட்டிருக்கிறது.

இவ்வாறு விஸ்தாரமாக ஒருநாளில் செய்து வருவது நாகரிகமா? அல்லது மூன்றுநாளை க்கு 18 முழம் நெய்யும் நம் சுதேசிகளின் முறை நாகரிகமா? பருத்திவிளைவில்லாத அங்கி லேயர் பருத்திவிளைவுள்ள நம்மை நெசவுத் தொழில் முயற்சியிலும் ஜெயித்திருப்பதை உத்தேசித்து நாம் அவமானமடைய வேண்டு மேயல்லாமல் நாகரிகமென்று பெருமையடை வதற் கிடமில்லை. அந்த அவமானத்தை நிவர்த் திக்கும் சக்தி நம்மிடத்திலிருக்கும்போது அவ்வாறு நிவர்த்தி தேடிக்கொள்ளாமற் முத லெல்லாம் ஆபரணத்திலிட்டு அவமானத்தி லடங்கியிருப்பது அவமானத்திலும் அவமா னம்.

சங்கீதம் ஓர் சரீரசுகம்.

சங்கீதம் தற்காலத்தில் வெகுபேர் பழகி வந்தாலும் அதின்சுகம் நமக்கில்லாமற் போய் விட்டது. மனோபாவங்கள் அனுபோகரீதிக் குப் புஷ்டிவரும்படி சமயம், சந்தர்ப்பம், தரா தரம் இவைகட்குத் தகுந்தமாதிரியாய் வீண் ஆகோஷமும் கோணங்கித்தனமும் இல்லாமல் சாஸ்திரங்களில் லக்ஷணம் கூறிய வண்ணம் முற்காலத்தில் பாடிவந்தார்கள். அதில் சுகம் இருந்தது. தற்காலத்தில் வேகடைசுபாவம் அதிகரித்திருப்பதற் கொப்பாய், சங்கீதமும் வேகடைப்பட்டுப் போய்விட்டது. மலையா ளத்தில் இராமாயணத்திற்குப் புதுமெட்டு அமைத்திருப்பதில் அநேகம் ஜாவளிமெட்டி லும் இந்துஸ்தானி டப்பா மெட்டிலும் இன் னும் வேகடையாயுள்ள நாடோடியாயிருக்கும் பலவகை மெட்டிலும் பாணி ஏற்படுத்தப்பட்டி ருக்கிறது. ஜாவளியென்பது விடாள் சுபா வத்தைக்குறிக்கவந்த மெட்டு, தர்மபாசத்தாற் கட்டுண்டு மாதாபிதா வாக்குப் பரிபாலனம் பண்ணும்பொருட்டு அரசு துறந்து சுகம்துற ந்து நாடுதுறந்து மரவுரியுடுத்தி தவவேடத் துடன் காட்டில் 14 வருஷகாலம் தள்ளி, அரக் கர் மூலம் துன்பத்துக்குட்பட்டு போர்புரிந்து முடிவில் வெற்றியடைந்து மகாபுருஷத்துவ மாக வாணுள்செலுத்திய ராமகதைக்கும் ஜா வளிக்கும் சம்பந்தம் இருக்காது. விநயம், துக்கம், பரிதாபம், வியாகுலம், யுத்தக்குழப் பம், அதன்பின்புள்ள சந்தோஷம், வைராக் கியம், பக்தி, சிரத்தை இவைகட்குத் தகுந்த மெட்டுக்கள்தான் இணக்கமாயிருக்கக்கூடியன அப்படியிருக்க இந்துக்கள் சுபாவமே யல்லா மல் மகம்மதிய மெட்டுக்களால் இந்துக்கள் உணர்வை எங்ஙனம் விளக்குகிறது. ஒரு வேளை இது சாத்தியமென்று வந்தாலும் ராக மெட்டு சமயோசிதமா யிருக்கவேண்டும். லக்ஷ்மணர் யுத்தத்தில் மூர்ச்சைபோட்டு விழு ந்தவுடன் ஸ்ரீராமருக்கு விசனமுண்டாகி லக்ஷ் மணரை மார்பில் சார்த்திப் புலம்பும்போது 'முத்துமாராக்குலக்கு' என்னும் சக்கிலிச்சிப் பாட்டிற்பாடுவது சமயோசிதமா? அப்படி யிருந்தும் அம்மெட்டிற்குள் புதுமெட்டமைந் திருக்கிறது. ரவையுதிர்த்துக் கொட்ட வேண்டுமென்ற தப்பிதமான சித்தாந்தத்தின் மேல் ரம்பம்கொண்டு அறுத்துப் பொடி உதிர்த்தாற்போல் கரகரவென்று சத்தம் எழுப்பி சன்னமான தொண்டையிலிருந்த தைத் திடீரென்று மலைபோல் தடித்த தொண் டையிலாக்கிச் சிச்சென்றிருந்தது இடி

ரென்று மடத்தவனை கூப்பிட்டாற்போல் விரிந்த தொண்டையில் ஆழச்செய்து மகாவிகாரமாகத் தற்காலத்திற் பாடுகிறார்கள். இவ்வாறு பாடுபவர்கள் முக்கியமாய் புது நாகரிகம் கொண்டாடுபவர்கள் தான். அதாவது, வைரக்கடுக்கன் காதிலிட்டு மோதிரங்கள் அணிந்து, தங்க அரைஞாண்மாட்டி கமான் குடுமிவைத்துக்கொண்டு சிமிட்டாப்பிடுங்கின நெற்றி சகிதம் அருகுமீசை வைத்துக்கொண்டு மூலைத்தார்பாய்ச்சி வேஷ்டி யுடுத்தி சந்தனப்பொட்டின்மேல் குங்குமப்பொட்டும் அதற்குக்கீழ் விபூதி சாந்துப்பொட்டுமாகத் திரியும் வாலிபர்கள் தான். சரீரப் பிரயாசையின்றி பிரயாணஞ் செய்வது சரீரசுகமாகையால் ரெயில்வண்டி முதலியவை நிர்மாணிப்பது நாகரிகந்தான்.

யதார்த்த நாகரிகம்: இருதயசுகம்.

இருதயசுகம் முக்கியமாய்க் கவிதையின் மூலந்தான் அடையவேண்டியது. தற்காலத்தில் ஆபரணலங்காரங்கொண்டாடும் வாலிபர்கள் எந்தபாஷையில் கவிதா சுகமடைகிறார்கள்? எந்தபாஷையில் கவிதையென்று சொல்லும்படியான கவிதை யுண்டாக்கி இருக்கிறார்கள்? ஒருபாஷையிலுமில்லை. அருட்பாவென்னும் தேனை வாசித்துப் புகட்டும்படி நான் பலபேரிடம் சிரமப்பட்டும் பத்துப் பாடல்கள் கூஷமையோடு கேட்கப்பட்டவர்கள் இல்லாமல் விசனப்பட்டிருக்கிறேன். வயிற்று சுகத்தைப் பார்க்கிலும் இருதயசுகம் மேலான பதவியில் உள்ளதுதான். புத்திசுகம் ஹிருதயசுகத்தைக்காட்டிலும் மேலானது. அதுசாஸ்திரமூலந்தான் கிடைக்கக்கூடும். புத்திசுகத்தைக் காட்டிலும் ஹிருதயசுகம் தாழ்ந்தது. அதைப்பார்க்கிலும் விஷயசுகமாகிய சிற்றின்பசுகந்தாழ்ந்தது. இவ்வகை சுகானுபவங்கட்கு வேண்டிய சிரசு ஹிருதயம் வயிறு முதலிய கருவிகள் ஒன்றிற்கொன்று படிப்படியாய்த் தாழ்ந்தபடியிற்றானே அமைந்திருப்பதை யோஜிக்கும்போது பகவத்சங்கற்பமும் அவ்வாறென்றே நிச்சயிக்கவேண்டும்.

நாகரிகம்: ஆத்மசுகம்.

இந்தசுகம் எல்லாவற்றிலும் மேலானசுகம் என்பதற்கு சந்தேகம் இல்லை. ஆத்மசுகத்தில் தாழ்ந்த படியில் இருப்பதாயுள்ள தர்மசுகம் சத்தியசுகம் எவ்வளவோ பெரிதென்று மகான்கள் கூறியிருக்கிறார்கள். பிரகிருதிக்கு அதீதமாயுள்ள ஆத்மசுகம் வாய்மொழியால் மனவிற்கெட்டாது. இவ்வகை சுகம் பகவத் கடாக்ஷத்தால் அடையவேண்டும். பகவத் கடாக்ஷம் பக்தி, தர்மம், தவம், யோகம், ஸமஷ்டிசேவை முதலியவற்றாற் பெறவேண்டும்.

---

## SHORT STORY.

### GANAPATI'S STRATAGEM.

### கணபதியின் சூழ்வினை.

---

நான் ஒரு நாள் பகல் பன்னிரண்டு மணிக்கு தலை குனிந்தவண்ணமாய் ஸெனேட் ஹௌஸிற்குப் (Senate House) பக்கத்தில் நின்று என் நிலைமையைப்பற்றியோசித்துக்கொண்டிருந்தேன். அப்பொழுது என் பின்னால் ஓர் உயரமான மனிதர்புன்னகை கொண்டவராய் என்னை முதுகில் தட்டினார். அவர் சிறிது நேரம் என்னையே உற்றுநோக்கி,

"அடே, ஷண்முகம்! உன்னை எங்கெங்கு தேடுவது? அப்ப! கடைசியா யகப்பட்டாய். இனி பொன்றும் தொந்தரையில்லை. சரி; வா, போவோம். என்ன, தயங்குகிறாயே? ஷண்முகம்! நீ முன்போல் ஏழையல்ல. உன் சிறிய தந்தையாகிய பத்மநாப முதலியார் தாம் இறக்கும்போது தம்முடைய சொத்துக்கள் யாவும் உன்னைச்சேர வேண்டுமென உயில் (Will) எழுதிவைத்துவிட்டுப் போய் விட்டார். உனக்கு இப்போது வருஷத்தில் பத்தாயிரம்

ரூபாய் வருமானமுள்ள சொத்திருக்கிறது. வா, போவோம்,'' என்று அவர் மறுபடியும் என்னை வற்புறுத்தி அழைத்தார்.

இதைக்கேட்க எனக்கு ஆச்சர்யம் உண்டாயிற்று. என்ன? குடிக்கக்கஞ்சியின்றி, எச்சில் சுருட்டுப் பிடித்துக்கொண்டிருந்த எனக்கா வருஷத்தில் பத்தாயிரம் ரூபாய் வருமானமிருக்கிறது? இது உண்மையாக விருக்குமா? சே! மூடயோசனை. இது எங்காகிலும் உண்டா?

ஆனால் என் செய்வது? என் பக்கத்தில் இருந்தவர் அம்மாதிரியல்லவோ தெரிவிக்கிறார்? என் பெயர் ஷண்முகமாம்! மெத்த நன்றாக இருக்கிறது! இது என்ன? சந்திரசேகரனல்லவா என்பெயர்!

நான் சற்றுநேரம் நிதானித்தேன். பிறகு,

"ஐயா! என்......................" என்று சொல்லி முடிப்பதற்குள் அவர்,

"போதும், என்னுடைய 'கஸின்' (Cousin) ஷண்முகம் எனக்குத் தெரியாதா? வா, வீட்டுக்குப் போவோம் வேறு பேச்சு ஒன்றும் வேண்டாம். நீ முன்போல் ஏழையல்ல என்பதைமாத்திரம் ஞாபகத்தில் வைத்துக்கொள். என்ன, காலையிலிருந்து சாப்பிடவில்லையா? பசித்தவன் போல் காண்கிறாயே? வா, முதலில் ஏதாவது ஒரு ஹோடலுக்கு (Hotel)ப் போய் சிற்றுண்டி யருந்தி பிறகு மைலாப்பூருக்குப் போகலாம்" என்று சொல்லிக்கொண்டே அவ்வழியாய்ப் போய்க்கொண்டிருந்த ஒரு ஜட்காவைப்பேசி அதில் என்னை ஏறும்படி தெரிவித்து, தானும் ஏறிக்கொண்டார். பிறகு, நாங்கள் இருவரும் ஒரு ஹோடலுக்குப் போய் பலகாரம் சாப்பிட்டு மைலாப்பூரிலிருக்கும் 'இலக்ஷ்மி நிவாஸம்' என்னும் பங்களாவைப் போய்ச்சேர்ந்தோம்.

நான் ஹோடலிலிருந்த போதும், வண்டியிற் சென்ற போதும் அவருடன் அதிகமாய் வார்த்தையாடவில்லை. நான் ஷண்முகம் என அவர் தவறாய் எண்ணி இருக்கிறாரென எனக்குப் புலப்பட்டது. ஆனால், நான் உண்ணவும் உடுக்கவும் வகையின்றி அன்று காலைமுதல் பட்டினி கிடந்தமையால் அவருடன் செல்ல சம்மதித்தேன்.

அவருடைய சம்பாஷணையால் ஷண்முகம் என்பவன் மூன்று மாதகாலமாக காணாமற் போய்விட்டதாகத் தெரிந்தது. அவன் மூன்று மாதங்களாக காணவில்லை ஒரு வேளை இனிமேல் எப்போதுமே திரும்பி வராமலிருக்கவுங்கூடும். மேலும், அவன் பிறதேசமோ அல்லது இவ்வுலகை நீத்தோபோயிருக்கலாம். எனக்கோ வயிறு வளர்ப்பது இயலாததல்லவெனினும் மெத்த பிரயாசை எனத்தோன்றியது. இச்சமயத்தில் வருஷத்தில் பத்தாயிர ரூபாய் வருமானமுள்ள ஸ்திதி வருவதாயிருப்பின் அதை விட்டு விடுவதா? வலியவரும் ஸ்ரீதேவியைக் காலால் உதைத்துத்தள்ளலாமா? ஆதலால், என்னை அழைத்துச்செல்பவர் நான் இன்னானென அறிந்து துரத்தி விடும் வரையில் அவருடனேயே சுகமாய்க் காலங்கழிப்பதெனத் தீர்மானித்தேன்.

நான், சந்திரசேகரனாகிய நான், பரம ஏழையாகிய நான், திக்கற்றநான், நாடோடியாகிய நான், வருஷத்தில் பத்தாயிரம் ரூபாய் வருமானமுள்ளவனாகச் செய்யப்படுவதெனில் என் ஆச்சர்யத்துக் களவேது!

நாங்கள் இலக்ஷ்மி நிவாஸம் போய்ச்சேர்ந்ததும், கணபதி சுப்பு முதலியார் (அது தான் என்னை அழைத்து வந்தவரின் பெயர்) தற்கால நாகரிகத்துக் கேற்றவாறு அலங்கரிக்கப் பெற்றிருந்த இரண்டு அறைகளை என் உபயோகத்துக்காக விடுத்தார்.

மாலை சுமார் ஆறுமணியிருக்கும். நான் என் அறையில் உட்கார்ந்து களைப்பாறிக் கொண்டிருந்தேன்.

அச்சமும் ஆறுதலும்.

நான் சுகமாக சோபாவின்பேரில் சாய்ந்து, சுவர்களில் மாட்டப்பட்டிருந்த அழகிய படங்களை கவனித்து உல்லாசமாய் ஆனந்த சாகரத்தில் மூழ்கிக்கிடந்தேன். அச்சமயத்தில் ஒரு வேலைக்காரன் வந்து என் சிநேகிதன் சுந்தரம் வந்திருப்பதாகத் தெரிவித்தான்.

எனக்கு அச்சம் மேலிட்டது. கண்கள் மப்படைந்து தலை சுழல்வதுபோலிருந்தது. என்னைக் கண்டதும் நான் ஷண்முகமல்லவென சுந்தரம் கண்டு கொள்ளுவான். அப்போது என்கதி அதோகதிதான். போலீஸார் வசம் ஒப்புவித்து விடுவார்களெனத் தோன்றியது. பிறகு, நான் பிடித்துக் கொண்டிருந்த சுருட்டைப் பக்கத்தில் வைத்துவிட்டு என்ன ஆபத்து வருமோ என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்.

அறையினுள் வந்த அழகிய வாலிபனை சுந்தரம் சற்றுநேரம் என்னையும் கணபதிசுப்பு முதலியாரையும் உற்றுநோக்கிக் கொண்டிருந்து விட்டு, என் பக்கலில் உட்கார்ந்து, என் வருகைக்காக சந்தோஷப்பட்டதாக வெகு அன்பாய்ப் பேசினன்.

அவன் அங்ஙனம் பேசியதால் என் பயம் விலக ஆரம்பித்தது. சுந்தரமும் என்னை ஷண்முகமென்றே எண்ணிக்கொண்டதால், இனி அவனைப்போல் நடப்பதே உத்தமமென எனக்குப்பட்டது. அதற்காக ஷண்முகத்தின் சங்கதிகள் அதிகம் தெரியவேண்டியது அவசியமாகையால், அவர்களிருவரையுமே பேசவிட்டிருந்தேன்.

இரவு 9-மணி விக்டோரியா பப்ளிக் ஹாலில் நாங்கள் உட்கார்ந்துகொண்டு சுகுண விலாஸ சபையாரால் நடிக்கப்பட்ட "லீலாவதி—சுலோசன" என்னும் சரிதையைப் பார்த்துக் களித்துக்கொண்டிருந்தோம். அச்சமயம் ஷண்முகத்தை அறிந்தபலர் என்னை அவனெனக் கருதியே என் க்ஷேமம் விசாரித்தார்கள். "சரிதான், நான் எல்லோருடைய கண்களிலும் மிளகாய்ப் பொடியை தூவிவிட்டேன்! என்னுடைய அதிர்ஷ்டமே, அதிர்ஷ்டம்!" என்று நினைத்துக்கொண்டேன்.

பழவினை.

நான் அன்றிரவு படுக்கைக்குப் போனபோது, எனக்கு நித்திரையே வரவில்லை. என் யோசனை பலவழிகளிலோடிற்று. நான் கண்களை மூடிக்கொண்டு படுத்துக்கொண்டிருக்கும் போது என்னுடைய இளமைப் பருவம் என் நினைவுக்கு வந்தது. நான், என் சிறுவயதில் அதாவது என் 15-வது வயது வரைக்கும் ஜெனரல் ஆஸ்பத்திரியில் இருந்தேன். என்னை யாரோ அவ்விடம் என் இரண்டாவது வயதில் விட்டுச் சென்றார்களாம். எனக்கு என் தாய் தந்தையர்களைப் பற்றிய சங்கதி சிறிதும் தெரியாது. நான் என் 15-வது வயதில் ஆஸ்பத்திரியினின்று வெளிவந்ததும் ஒரு ஆபீஸில் வேலைக்காரப் பையனாக அமர்ந்தேன். பிறகு ஒரு குமாஸ்தாவாக ஆனேன். அதிலிருந்து ஓர் பலசரக்கு மளிகை நானே திறந்து அதில் என் துர்அதிர்ஷ்டத்தால் நஷ்டமடைந்தேன். இப்போது நான் ஜீவிக்க வழியற்றவனாய் விட்டேன். இப்படியிருக்கும் சமையத்தில் இவ்வித அதிர்ஷ்டம் வந்துற்றது.

குற்றமுள்ளநெஞ்சு குறுகுறுக்கும்.

இப்போது இதைவிட்டு விடுவதா? அல்லது ஷண்முகமென நடிப்பதா? இவ்வினா என்னை வருத்திக் கொண்டிருந்தது. நான் இவ்விதமே போவேனேயானால் என்றாவது ஒரு நாள் யாராவது ஒருவர் என்னை ஷண்முகமல்லவென்று கண்டு கொள்ளுவார்கள். அப்போது என் கதி என்னும்? எப்போது எவனொருவன் நான் ஷண்முகமல்லவெனக் கண்டுகொள்ளுவானே வென்னும் எண்ணம் சதா என்னை வருத்திக் கொண்டிருக்கும். இவ்வித நிலைமையில் என் மனதுக்குத் திருப்தியேது? இங்ஙனமெல்லாம் யோசித்துக்கொண்டு கடைசியில் ஒரு முடிவுக்கு வந்துவிட்டேன். அது என்னவெனில், கணபதிசுப்பு முதலியாரிடம் போய் சங்கதிகள் யாவற்றையும் சொல்லிவிட்டு மன்னிப்புப் பெற்றுக்கொள்வதே!

விடியற்காலை நான்கு மணி. எங்கும் நிசப்தமாயிருந்தது. நான் கணபதிசுப்பு முதலியாரிடம் போவதற்காக மெத்தையை அடைந்து, அவரது அறையைக் கிட்டினேன். அச்சமயம் அவர் சுந்தரத்துடன் பேசிக்கொண்டிருந்த வார்த்தைகளைக்கேட்டு அப்படியேஸ்தம்பித்து நின்று விட்டேன்.

சதியாலோசனை.

"ஷண்முகத்தைத் தான் கொன்று விட்டோமே! ஆனல் அதைப்பதறிச்செய்துவிட்டோம்;

இப்போது அவன் சவத்தைக்கொண்டு அவன் இறந்ததை ரூபித்தாலொழிய சொத்து எனக்கு வராது. ஆகையால் தான் இம்மடையனை இவ்விடம் கொண்டுவந்திருக்கிறேன். இவனைக் கொன்றுவிட்டு..................எப்படித் தொலைக்கலாம்..........பாஷாணம்..........?''

இதைக்கேட்டதும் என் நினைவு தடுமாறியது. அவ்வீட்டிலே இன்னும் ஒரு க்ஷணமேனும் இருக்கப்படாதெனத் திரும்பிப்போக ஆரம்பித்தபோது மறுபடியும் கணபதிசுப்பு பேசியதைக் கேட்கலுற்றேன்.

"நான் இவனைக் கொலை செய்யவேண்டிய ஆவசியகமில்லை. ஆனால், பக்கத்துத் தெருவிலிருக்கிறானே, அந்த வக்கீல் இராமகிருஷ்ணனைப்பற்றித் தான் கவனிக்கவேண்டி இருக்கிறது. அவன் ஏதோ சந்தேகிக்கிறான். ஆகையால் இவனைக்கொன்று ஷண்முகம் இறந்து விட்டானென அவனுக்கு ரூபிக்க வேண்டும்'' என்று சொன்னார்.

"தலை தப்பும் வழி."

இதைக்கேட்டதும் எனக்கு அங்கு நிற்க முடியவில்லை. கை கால்கள் உதறின. ஆகையால் உடனே அவ்விடத்தை விட்டு என் அறைக்குப்போய் அங்கிருந்த 'ஆல்மனாக்கில்' (Almanac) தேடிப்பார்த்து வக்கீல் இராமகிருஷ்ணன் வீடு கச்சேரித் தெருவு 19-வது நெம்பரென்றறிந்து அவருடைய வீட்டை விசாரித்துக் தேடிக்கொண்டு போனேன்.

நான் கதவைத் தட்டவும் வேலைக்காரன் கதவைத்திறந்து என் பெயரைக்கேட்டான். நான் ஷண்முக மென்றேன். அவன் சிறிது நேரம் கழித்து வந்து என்னை உள் அழைத்துக்கொண்டு போய் வக்கீல் இராமகிருஷ்ணரின் முன்னிலையில் விட்டான்.

நான் அவரைக்கண்டதும் "ஐயா, என் பெயர் ஷண்முகமல்ல. எனக்கு அப்பெயர்வந்த விதத்தைத் தெரிவிக்கிறேன்''.-என அவரிடம் என் வரலாறு எல்லாவற்றையும் சொன்னேன் அவர் நான் சொன்ன யாவையும் கருத்துடன் கேட்டுக்கொண்டிருந்து விட்டு சொல்லுகிறார்:—

சரித்திர வரலாறு.

"பத்மநாப முதலியாரென்றொருவரிருந்தார். அவருக்குத் திரண்ட சொத்துக்களிருந்தும் சந்ததி கிடையாது. அவருக்கு இரண்டு சகோதரர்கள். அவர் தமையன் குமாரனின் பெயர் கணபதிசுப்பு தம்பி புத்திரனின் பெயர் ஷண்முகம். அவருடைய சகோதரர்களிருவரும் தங்கள் இளவயதிலேயே காலஞ்சென்றுவிட்டார்கள். இவ்விருபாலர்களும் பத்மநாப முதலியாருடைய சம்ரக்ஷணையின் கீழிருந்து வந்தார்கள். முதலியார் ஷண்முகத்தின் மீது தன் பட்சத்தை அதிகமாய்ச் செலுத்தியதுமல்லாமல் தனக்குப்பின் அவனுக்கே சகல சொத்துக்களையு மளிப்பதாகத் தீர்மானித்திருந்தார். அவன் சூதாட்டத்திற் பிரியனாக விருந்தமைக்காக அவனைக் கண்டித்தும் வந்தார். அப்படியிருக்கும்போது கணபதிசுப்புவிற்கு ஷண்முகத்தின் மீது அருவருப்புண்டாகியது. வயது வளர வளர அவனுடைய பொறாமைக் குணமும், பேராசையும் அவனுடனேயே வளரலாயின. இங்ஙன மிருக்கையில், ஓர் நாள் ஷண்முகம் சிதம்பரம் போயிருந்தான். அப்போது கணபதி சுப்பு ஷண்முகத்தாலெழுதப்பட்ட 'அண்டிமாண்டைப்' போலொன்று 'போர்ஜ் * செய்து அவனுடைய சிறிய தந்தையிடங்காண்பித்தான். அவன் அதைப்பற்றி விவரித்துங்கூறினான். எப்படியெனில்: ஷண்முகம் முருகேசமென்பவனுடன் சூதாடி முன்னூறு ரூபாய் தோற்றுவிட்டதாகவும் அதற்காக 'அண்டிமாண்டு' எழுதிக் கொடுத்ததாகவும் அவ்வண்டிமாண்டை கணபதிசுப்பு முதலும் வட்டியும் கொடுத்து மீட்டுவந்ததாகவுமே. இதைக்கேட்டதும் பத்மநாபமுதலியாருக்கு ஷண்முகத்தின் மேல் அதிக கோபமுண்டாக அவன் ஊரினின்று வந்ததும் அவனிடம் அந்த பத்திரத்தை காண்பித்து தான் யாவும் அறிந்துக் கொண்டதாகவும் உடனே வீட்டை விட்டு அவன் விலக வேண்டுமென்றும் தெரிவித்தார். அது கேட்ட ஷண்முகம் மனம்பதறி "கூடிய சீக்கிரத்திலேயே உங்களுடைய தப்பிதத்திற்காக பரிதபிப்பீர்கள்.'' என்றுரைத்து வீட்டை விட்டகன்றான்.

"கேட்டிக்காரன் புளுகு எட்டுநாளில் வெளியாகும்.''

"அதன் பின் பத்மநாபமுதலியார் தன் சொத்துக்கள் யாவும் கணபதிசுப்புவைச்

* தப்புக் கையொப்ப மிட்டு.

சேர வேண்டுமென உயில் (Will) எழுதிவைத்தார். அப்போது ஒருநாள் முதலியார் கணபதி சுப்புவின் அறைக்குப்போனூர். அவ்விடத்தில் போடப்பட்டிருந்த ஆபீஸ் மேஜை (Office Table) யின் மேலிருந்த மையொத்து காகிதத்தின் (Blotting Pad) கீழ் ஷண்முகம் எழுதியிருந்த ஓர் காகிதத்தைக்கண்டு அவன் நினைவு வந்து அது என்னவெனப்பார்த்தார். அது ஒரு 'அண்டிமாண்டு' ஷண்முகம் எழுதும் பாவனையாய் யாரோ ஒருவர் அதை எழுத அப்பியவித்ததாக விளங்கிற்று. அதைப்போன்ற 'அண்டிமாண்டு' தான் கணபதிசுப்பு அவரிடம் தந்தது. அந்நினைவு வரவும் கணபதி சுப்புவின் வஞ்சகத்தனம் அவருக்கு தெற்றெனப் புலப்பட்டது. அடங்காத கோபங்கொண்டார். தான் ஆயாமல் பதறி ஷண்முகத்தை துரத்தி விட்டதற்காக தன்னைத்தானே பெரிதும் வெறுத்துக்கொண்டார். அதன் பின் அவர் கணபதிசுப்புவை வீட்டை விட்டுத்துரத்தி விட்டு சகல சொத்துக்களும் ஷண்முகத்தைச் சேரவேண்டுமென உயில்(Will) எழுதிவைத்து விட்டார். அப்போதே ஷண்முகத்தைத் தேடவும் மெத்தப் பிரயாசைப்பட்டார். யாது செய்தும் பிரயோசனப்படவில்லை. அவர் அவனுக்குச்செய்த துரோகத்தை நினைந்து, நினைந்து மனங்கசிந்து இரண்டு மாசத்திற்கு முன்னரே இறந்து விட்டார்.

"இவ்விதமிருக்கும்போது மூன்று மாதங்களுக்குமுன் ஷண்முகம், கணபதிசுப்பு, சுந்தரம் ஆகிய மூவரும் சமுத்திரத்தில் படவு விட்டுக்கொண்டுபோனூர்கள். அப்போது ஷண்முகத்தைத் திடீரென்று சமுத்திரத்தில் தள்ளிவிட்டு மற்ற இருவரும் கரைக்குத் திரும்பி விட்டார்கள். அவன் நீஞ்சத் தெரிந்தவனுதலால் பக்கலில் சென்று கொண்டிருந்த ஓர் படவுக்கு நீஞ்சி அதனுதவியால் கரை சேர்ந்தான். ஆனல் அவன் அதிக நேரம் தண்ணீரில் கிடந்தமையால் கரைக்கு வந்ததும் மூர்ச்சையானுன். அவனை ஜெனரல் ஆஸ்பத்திரிக்குத் கொண்டுபோய் பரிசோதித்ததில் அவன் மூளைசுரத்தினல் வருந்துகிருனென அறிந்து அவனுக்கு சிகிச்சை செய்து வந்தார்கள். இதை அறியாத கணபதிசுப்பு, சுந்தரம் 'ஷண்முகம் இறந்தானென' நினைத்திருக்கிருர்கள்.

"தன்வினை தன்னைச் சுடும்."

"அப்போது தான் பத்மனுபமுதலியார் சோகத்தால் இறந்தது. அவருக்குப்பின் சட்டப்பிரகாரம் சகல சொத்துக்களும் ஷண்முகத்தைச் சேரும். அவன் இறந்தால் கணபதிசுப்புவைச் சேரும். இதனல் ஷண்முகம் இறந்துவிட்டானென நிரூபிக்க வேண்டியது அவசியமாகிறது. "ஷண்முகத்தைக் கொன்றுவிட்டோம். அவன் இறந்து விட்டான்" என கணபதி சுப்பு நினைத்திருந்தானுனுலும் அதை நிரூபிப்பது அசாத்தியமானதால் ஷண்முகத்தை உருவத்தில் ஒத்திருக்கும் உன்னை இப்போது பலியிட எத்தனித்திருக்கிருன். நீ தான் ஷண்முகமென்று பலர் அறிந்து கொண்ட பிறகு உன் பிராணனைப் போக்கினல் ஷண்முகம் இறந்து விட்டானென யாவரும் நினைத்து விடுவார்கள். அதன் பின் சொத்துக்கள் யாவும் அவனைச் சேர்ந்து விடும். இத்தகைய அவன் செய் சூழ்ச்சிக்காளாகாமல் உன் நல்லதிர்ஷ்டத்தால் என்னை அடைந்தாய்" என்றுசொல்லி சற்றுநேரம் நிறுத்திவிட்டு என்னைப் பார்த்து, "உன் தந்தையின் பெயர் யாது?" எனக் கேட்டார்.

"எனக்கு என் தாய் தந்தையரைப்பற்றித் தெரியாது, என்னை யாரோ ஜெனரல் ஆஸ்பத்திரி யண்டை என் இரண்டாவது வயதில் விட்டுச் சென்றூர்களாம். இப்பொழுது எனக்கு வயது முப்பத்திரண்டு" என்றேன்.

"தர்மம் தலை காக்கும்."

அவர் சற்றுநேரம் நிதானித்துப் பிறகு ஓர் மேஜை அறையைத்திறந்து ஓர் போட்டோ (Photo)வை எடுத்து சில நிமிஷம் அதையே உற்று நோக்கிக் கொண்டிருந்து விட்டு என் முதுகைக் காண்பிக்கச் சொன்னூர். அவர் அதைப் பார்த்ததும் புன்சிரிப்புடன் 'ஷண்முகம்' என விளித்தார். அப்போதே பக்கத்து அறையின் கதவு திறக்கப்பட்டு என்னை முற்றிலும் உருவத்தில் ஒத்திருந்த ஓர் மனிதன் வந்தான். அவனுடைய ஒவ்வொரு உறுப்பும் என்னுடையதைப் போலவே இருந்தன.

லாயர் அவனை என் பக்கத்தில் நிற்கும்படிச் செய்து உண்மை ஷண்முகத்தைப் பார்த்து, "ஷண்முகம்! உன்பக்கத்திலிருப்பவர் தான் உன் சகோதரன்" என்றூர்.

இதைக்கேட்டதும் எனக்கதிக் ஆச்சர்ய மாய்விட்டது. நான் மிரட்சியாய் விழித்துப் பார்த்தேன். ஒருவேளை இதுவும் ஓர் மோச மோவென எண்ணினேன்.

லாயர் என் ஆச்சரியத்தைக்கண்டு சொல்லு கிறார்:

"சந்திரசேகரா, உன் தந்தைக்கு ஒரே தடவையில் 'இரட்டை'யாக இருகுமாரர்கள்ஜனித் தனர். அவர்கள்தான் நீங்கள். உன் பெயர் கோபாலன். உன் செவிலித்தாய்க்கும், உன் குடும்பத்திற்கும் விவாதமேற்பட்டதால் அவள் உன்னைத் தூக்கிக் கொண்டு போய்விட்டாள். உன்னைக் கண்டு பிடிக்க எவ்வளவு தேடியும் நீ அகப்படவில்லை. கடைசியில் அது நிஷ்பிரயோசனமென ஒழித்து விட்டனர். வயது, உருவம், முதுகின் மீதிருக்கும் மச்சம் இவைகளால் நீதான் அவனென நான் கண்டு கொண்டேன்."

பிரிந்தவர் கூடல்.

நாங்கள் இருவரும் தழுவிக் கொண்டோம். என் சகோதரன் நேற்றுத்தான் ஆஸ்பத்திரியினின்று வந்தாராம். இப்போது என சரிதை முடிந்து விட்டதெனச் சொல்லலாம். இன்னும் கொஞ்சந்தானிருக்கிறது. நாங்களிருவரும் உடனே புறப்பட்டு 'இலக்ஷ்மிநிவாஸம்' போய்ச் சேர்ந்தோம். கணபதி சுப்பி எங்களைக் கண்டதும் அச்சமுற்று மூர்ச்சையாய்ச் சாய்ந்தார். நாங்களிருவரும் அவரைத்தேற்றி,

அபகாரத்துக் குபகாரம்.

"சகோதரா! உமக்கு வருஷத்தில் ஆயிர ரூபாய் தந்துவிடுகிறோம். நீர் செய்த ஒவ்வொரு துரோகத்தையும் மன்னித்தோம்." என்றோம்.

அதைக் கேட்டதும் கணபதிசுப்புவின் ஆனந்தத்திற் களவில்லை. அவர் எங்களிருவருடைய கைகளையும் பரிந்தெடுத்துப் பிடித்துக் கொண்டு, கண்களில் நீர் ததும்ப,

"என் தீயசூழ்ச்சிகட்கு இத்தகைய மாறுதவி நம்பால் பெற நான் பாத்திரனல்லேன். உத்தமரியல்பு இத்தன்மைத்தே. நான் பாவி. என் சரிதையை யோர்ந்த மாந்தர் யாவரும் திருந்துவர் எனும் அபிலாசை ஓர் பக்கமிருக்க, உத்தமர் மற்றவரின் துஷ்கிருத்தியங்களை இலக்ஷியம் செய்யாது காருண்யமிகுந்து நன்மையேபுரிந்து நன்கு மதிக்கப்பெறுவரென எல்லாம் வல்ல ஈசன் தாட்களை இறைஞ்சுகின்றேன்" என்றார்.

முடிவுரை.

இது ஷண்முகம், கோபாலன் இவர்களின் தாயார் நற்குண விசேஷத்தால் அவர்கள் மனதில் குழந்தைப் பருவத்தில் தானே பச்சை மரத்தாணிபோல் பதிந்திருந்ததால் அந்த சுப வாசனை அவர்களைவிட்டகலாது ஆபத்து வேளையில் அவர்கள் தலைகாத்ததுமன்றி, அவர்களுக்கிரண்டுவினைத்துப் பண ஆசையினால் சூழ்வினை செய்த துஷ்டனையும் நல்லவனாகத் திருந்தச் செய்தது.

"கச்சைகட்டிக் கூத்தாடிக்
 கடைத்தெருவி லோடேந்திப்
பிச்சையெடுத் துண்டாலும்
 பிறர்துயரம் செய்யாதே."

என்னும் தொட்டிற் பழக்கந்தானே, அவர்களை முதிர்வயதில் உற்றவிடத்துதவியாயிருந்து காப்பாற்றியது. துர்ப்பழக்கமும் இப்படியே தொடரும் என்பதைத் தாய்மார் அறிந்து விவேக புத்தியால் குழந்தைகளை நல்வழியில் பழக்கி வளர்க்கவேண்டும்.

---

## SCIENTIFIC RECREATIONS FOR THE YOUNG.

## சிறுவர்க்கான ஜாலவினோதங்கள்.

### 1. கண்ணுக்குப்புலப்படா நாணயத்தைப் புலப்படச்செய்யும் வினோதம்.

ஓர் வெறுங் கோப்பையில் கால் அணாவைப் போட்டு அதை ஒரு மேசையின்மீது வைத்து மேசைக்கு சற்றுதூரத்தில் சென்று கோப்பையின் மேலோரம் கோப்பையிலிருக்கும் நாணயத்தை மாத்திரம் முழுமையும் மறைக்கிறதாகத் தோன்றும் அனனிலையில் கண்ணை அசைவறநிறுத்தி எவனையாவது கோப்பையிலிருக்கும் அணாவைக் கிஞ்சித்தும் அசைக்காமல் மெதுவாக ஜலம் வார்க்கச்செய்தால், கண்ணுக்கு புலப்படாதிருந்த நாணயம் இப்பொழுது தோன்றும்.

### 2. டம்ப்ளரில் தோன்றும் மாய நாணயம்.

அலங்காரத்தின் பொருட்டு சுற்றி பட்டை பட்டையாய் வெட்டப்படாததும், சாதாரண

மானதும் அடியைக்காட்டிலும் வாய் அகன்டுள்ளதுமான ஒரு வெள்ளைக்கண்ணாடி டம்ப்ளரில் பாதி சலம் வார்த்து அதில் ஒரு காலணாவைப்போட்டு, டம்பளரின் வாயை ஒரு அட்டையால் மூடி, ஜலம் கொட்டாதபடி ஜாக்கிரதையாய் அதைத்தலை கிழாகக்கவிழ்த்து மேஜையின்மேல் வைத்து டம்ப்ளரின் மேற்பக்கமாய் அட்டையைப் பார்ப்போமாகில் அதில் நாம் வைத்தகாலணாவும் அதுவன்றி அரையணா அவ்வளவு பெரிதான இன்னொரு நாணயமும் பக்கத்திலிருப்பதாகத்தோன்றும். இவ்வேடிக்கையை நூதனமாய்க் கண்டவுடன் டம்ப்ளரில் தோன்றும் இரண்டுநாணயமும் நிசமானதென்றே முற்றும் உண்மையாய் நம்புவன். அவனுக்கு உண்மையைக் காண்பிக்க, பிரத்தியக்ஷமாய் கண்ணால் கண்டது ஆரோபமாய் இருந்து விட்டதே என்று ஓர் வித ஆச்சரியமும் சந்தோஷமுமடைவன்.

### 3. பிரபை கானலாரோபங்கள்.

### (Illusions of Irradiation)

காலங்குலம் மத்தியரேகையுள்ள வட்டமான ஓர் கறுப்பு கடிதத்தை ஒரு விசாலமான வெள்ளைக்காகிதத்தின் மீதும், அதே அளவுள்ள ஓர் வெண்மையான கடிதத்தை ஒரு விசாலமான கறுப்புக்காகிதத்தின் மீதும், வைத்து, இரண்டு வட்டிக்கடிதங்களையும் ஒரு நிலையினின்று பார்ப்போமானால் கருப்புக் காகிதத்தின் மீதிருக்கும் வெண்மைக்கடித சக்கரம் மற்றதைவிட சற்று பெரிதாகத்தோன்றும்.

ஒரு குண்டூசியை வலது கண்ணிற்கு நேராக அருகாமையில் பிடித்து, இடது கண்ணை மூடிக்கொண்டு, கவனமாக 30-வினாடிநேரம் குண்டூசியின் தலையைப் பார்த்துகொண்டிருக்குங்கால், பக்கத்திலிருக்கும் ஓர் மேஜையின மீது பரப்பின பச்சைநிற வஸ்திரத்தின் மீது வைத்த எவ்விதவஸ்துவும் மங்கலாய்த் தோன்றும். இப்பொழுது மூடின கண்ணைத் திறக்காமல் பச்சை வஸதிரத்தின் மீதிருக்கும் வஸ்துவை நோக்கின் சில வினாடிநேரம் அது மாயமாய் மறைந்து விட்டாற்போல் தோன்றும், இவ்வண்ணமே குண்டூசியின்முனையைக் கவனமாய்ப் பார்த்துவிட்டுகறுப்புக்காகிதம் அல்லது கறுப்பு வஸ்திரத்தின் மேலிருக்கும் ஒரு வெண்மையான வஸ்துவைப் பார்த்தால் மேற்சொன்ன விதமாகத்தோற்றம் தோன்றும்.

நாம் ஒரு வஸ்துவைப் பார்த்துக்கொண்டேயிருக்கும்பொழுது நம்மனம் அதிக ஆழமான ஆராய்ச்சியில் விழ்ந்து விட்டால், நமது கண்கள் திறந்து கொண்டிருந்த போதிலும் எதிரிலிருக்கும் எப்பொருள்களும் நமக்குத் தோன்றுமற் போகிறது.

### 5. ஊசி வஸ்திரங்கள்.

ஒருகதவுக் கெதிரில் சற்றுதூரத்தில் நின்று அதின் பக்கமாய் ஒரு சாதாரண ஊசியை எடுத்து எறிய, அது கதவின் பலகையில் பட்டு அதில் குத்திக்கொள்ளாமல் கீழேவிழுந்துவிடும். ஆனல் ஊசியின் காதில் ஒரு துண்டு நூலைக்கோத்து எறிய தப்பாமல் மரத்தில் அம்புபோல் பாயும்.

---

## KINDERGARTEN STORY.

### The Evils of Insincerity and Hypocricy.

### பாலபிருந்தாவனக் கதை.

### சூதும் வாதும் வேதனைசெய்யும்.

பெங்களூரில் இராமசாமி முதலியார் என்பவர் ஒருவா வர்த்தகஞ்செய்து கொண்டிருந்தார். அவருக்கு மாணிக்கம், உருக்குமணி என்றிரண்டு பெண்பிள்ளைகளும், கிருஷ்ணன், கோவிந்தன் என்றிரண்டு ஆண்பிள்ளைகளும் உண்டு, உருக்குமணி நால்வரில் இளையவளாய் நான்கு வயதுடையவளாய் இருந்தாள். கோவிந்தன். கிருஷ்ணன் என்னும் ஆண்பிள்ளைகள் இருவரும் சென்னபட்டணத்தில் தங்களுடைய அத்தையம்மாள் வீட்டிலிருந்துகொண்டு ஒரு கல்விச்சாலையில் படித்து வந்தார்கள். ஒருமுறை இவர்களுக்கு ஒருவாரம் விடுமுறை கிடைக்கவே, பெங்களூரிலுள்ள தங்கள் தாய் தந்தையரைப் பார்த்துவரும் பொருட்டாகப் புகைவண்டி யேறிச் சென்றார்கள். தாய்தந்தையர்களும் இவர்களைக் கண்டமாத்திரத்தில் அதிக பரிவுடனே இவர்களுக்குத் தின்பண்ட முதலியன வாங்கிக்கொடுத்து உபசரித்தார்கள். இவர்களும் அண்டைவீட்டுச்சிறுவர்களுடனே பாலபிருந்தாவனத்தில் விளையாடிக்கொண்டிருந்தார்கள். இப்படி ஆறுநாள் கழிந்தன. ஆறுவதுநாள் சாயரக்ஷை இவர்களைப்பார்த்து இராமசாமி முதலியார் "அடா! பையல்காள்!, நாளைப்பகல் பன்னிரண்டு மணி வண்டிக்கு நீங்கள் தயாராக இருக்கவேண்டும். திங்கட்கிழமை நீங்கள் பள்ளிக்கூடம் போகவேண்டு

மல்லவா ? நினைவிருக்கட்டும்" என்று சொன்னார்.

உடனே மூத்தவனாகிய, கிருஷ்ணன் ". ஆமாம்" என்று சொல்லிவிட்டுக் கதவை ஒருக்களித்துக்கொண்டு சற்று உள்ளே சென்று மெதுவாக "இதென்ன இழவு" என்றான்.

அவன் தம்பி கோவிந்தன் "நாளைக்குத்திருவேங்கடம், நாராயணசாமி என்பவர்களோடு பந்தாடலாமென்று நினைத் திருந்தோமே, ஐயோ, பாழ்த்துப்போச்சே!" என்றான்.

அப்போது கிருஷ்ணன் "அடே கோவிந்தா! எல்லாரும் பிள்ளைகளைப் பள்ளிக்கூடத்துக்குச் சரியாகக்கணக்குப் பார்த்து அனுப்பிவிடுகிறார்களா, நம்முடைய வீட்டில் தான் பெரிய இலச்சையாக இருக்கிறது" என்று சொன்னான்.

கோவிந்தன்: "என்ன அண்ணா, நாளையோடே நமக்கு விடுமுறை சரியாய்ப்போகிறதே. நாளைக்குப் பன்னிரண்டு மணி வண்டிக்குப் போக தயாராக இருக்க வேண்டுமென்று இத்தனை நாளாக நாயனார் சொல்லிக்கொண்டு தானே யிருந்தார். உனக்கு நினைவில்லையா?" என்றான்.

கிருஷ்ணன்: "ஆமாம், ஆனால் என்ன? இன்னும் இரண்டு மூன்று நாளைக்கு இங்கேதானே இருக்கச் சொன்னால் ஆகாதோ, முழுகிப் போச்சுதோ?" என்று சொன்னான்.

கோவிந்தன்: "இன்னும் இரண்டு நாள் இங்கிருக்கும்படி கேட்பதனால் என்ன பிரயோசனம் ? எப்படியானாலும் நாம் போக வேண்டியவர்கள் தானே. சற்று முன்னாடியாகவே போய்விடலாமே" என்று சொல்ல,

கிருஷ்ணன்: "போடாபோ, ஏதோ ஒரு காரணமாக நம்முடைய நாயனார் நம்மை நாளைக்கு அனுப்ப விரும்பி யிருக்கிறார். அது இன்னதென்று எனக்குத் தெரிந்துகொள்ளக் கூடவில்லை. அது கிடக்கட்டும்." என்று சொல்லிக்கொண்டே கதவைப் படிய மூடிவிட்டு இரகசியமாய் "அடே, நாம் இன்னொரு நாள் இங்கே இருக்க ஒரு உபாயம் பண்ணப் போகிறேன்" என்று சொன்னான்.

கோவிந்தன்: "அதென்ன ? ஏதோ, சொல்லு; பார்க்கலாம்."

"விளையாட்டுப்போய் வினையாகத் தொடர்ந்தது."

கிருஷ்ணன் "அடபோடா, சுண்ணாம்பிலிருக்குது சூக்ஷமம், இதெல்லாம் எனக்குஆயிரம் அரைக்காற் பணந்தானே. பதினொன்றடித்த கொஞ்ச நேரத்துககெல்லாம் மெதுவாய் கம்மென்று போய் கடியாரத்தை நிறுத்திவிடுகிறேன். அப்புறம் நேரமாய்விட்டால், ஐயோ! மணி தெரியாமல் போச்சுதே' என்று சொன்னால் தகப்பனார் நம்மை என்ன செய்யப் போகிறார்." என்றான்.

கோவிந்தன்: "ஆமாம் அண்ணா! அதுமெய்யாகுமா?"

கிருஷ்ணன்: "ஏன் ஆகாது ? கடியாரம்போகாவிட்டால் பன்னிரண்டு அடிக்கிற வேளை நமக்கு எப்படித் தெரியும்?"

கோவிந்தன்: "அதன்பேரென்ன ? அது மாத்திரம் பொய்யாகாதோ? பெருமோசமாயிருக்கிறதே. நாயனாவுக்கு நாமம் போடப் பார்க்கிறாயே. கடியாரத்தின் சோலிக்குப் போவது சரியல்ல."

கிருஷ்ணன்: "போடா முட்டாள். வேறென்ன செய்கிறதாம். நான் என்ன, யாருடைய தலையையாகிலும் வெட்டி சாய்க்கப்போகிறேனா? குடிமுழுகி விட்டாற்போலப் பேசுகிறாயே. கூழுக்கும் ஆசை, மீசைக்கும் ஆசையா? நிற்கவும் ஆசை. ஒன்றுஞ் செய்யவுங்கூடாதென்றால் காரியம் எப்படியாகும்! கடியாரத்தில் ஆடுகிறகுண்டை அசையாமல் ஒருநாழி இரண்டுநாழி நிறுத்திவைத்தால் ஆருக்கென்னநஷ்டம்? கடியாரத்திற்குத்தான் என்ன சேதம்? நீ அவ்வளவு யோக்கியனானால் பேசாமல் இரு. செய்யவேண்டியதை நான் துணிந்து செய்து விடுகிறேன். எப்படியும் உனக்கு லாபந்தானே."

கோவிந்தன் தன்னாலானமட்டும் சொல்லியும் கிருஷ்ணன் அவன் சொல்லைக் கேட்கிறதாயில்லை. இப்படி பேசிக்கொண்டே இருவரும் உறங்கி விட்டார்கள்.

அன்று பாதிராத்திரியில் உருக்குமணியென்பவளுக்கு காய்ச்சல் கண்டது. உடனே வைத்தியரை வரவழைத்துப் பார்த்தபோது அவர் "இது பிரமாதமான ஜன்னியாயிருக்கிறது. ஆயினும் பெரிதல்ல. இந்த மருந்தை அதிக ஜாக்கிரதையாக இரண்டு மணிக்கொரு

முறை ஒவ்வொரு சிட்டிகைப் பிரமாணமாகக் கொடுத்துவாருங்கள். அப்படி என்னவாகிலும் அபாயமான குறிகள் தோன்றினல் ஒரு ஆளை அனுப்புங்கள். பகல் பன்னிரண்டு மணி வரையிலும் வீட்டிலிருப்பேன். பயப்படவேண்டாம்.'' என்று சொல்லிப் பத்தியம் பரியாரங்களையுந் தெரிவித்துப் போய்விட்டார்.

காலையில் தூங்கியெழுந்ததும் வீட்டிலுள்ள யாவரும் துக்கமாயிருக்கக்கண்ட இந்தச் சிறுவரிருவரும் தங்கள் தங்கை ஜுரங்கண்டுதவிக்கிறாள் என்றறிந்து அதிக வருத்தப்பட்டார்கள். ஒன்பது மணிக்கு அவர்களுடைய தாயார் சற்று நிம்மதியாக இருந்தார்கள். கிருஷ்ணனும் கோவிந்தனும் இதைக்கேட்ட மாத்திரத்தில் புழைக்கடைத் தோட்டத்தில் சென்று விளையாடிக் கொண்டிருந்தனர். தாயானவள் குழந்தையின் பக்கத்திலிருந்து கொண்டு இமை கொட்டாமல் பார்த்திருந்தாள்.

சற்றுநேரங்கழிந்தபிறகு முதலியார் பிள்ளைகளைக்கூவி "தயாராயிருக்கிறீர்களா?'' என்று கேட்டார்.

உடனே கிருஷ்ணன் "இல்லை நாயனு. இன்னும் மணியாகவில்லையே. இப்போது தான் கடியாரத்தைப் பார்த்தேன். பதினொன்றேகால் ஆயிற்று'' என்றுசொன்னன்.

முதலியாரும் "ஆனல் இன்னுங் கொஞ்ச நேரம் உல்லாசமாயிருங்கள். பத்திரம்! மணியை மறக்கப்போகிறீர்கள்.'' என்றார்.

என்று சொல்லிக்கொஞ்சதூரம் போனவுடனேகிருஷ்ணன் "அந்தமட்டில் தப்பித்துக் கொண்டோம்'' என்றான்.

கோவிந்தன் "எனக்கு திக்கென்றிருந்தது. கைகடியாரத்தை மடியிலிருந்து எடுத்துப் பார்த்திருப்பாரானல் நம்முடைய வண்டவாளம் வெளியாயிருக்குமே.''

கிருஷ்ணன் "அடபோடா, பயங்கொள்ளி. பனங்காட்டுநரி சலசலப்புக்கஞ்சுமா? கைகடியாரத்தைப் பார்த்தால்தானென்ன? பெரியகடியாரம் நின்றுபோய்விட்டதென்று தானேநினைத்துக்கொள்வார். எப்படியும் இந்நேரம்பன்னிரண்டுமணியாகியிருக்கும், இனிமேல் வண்டி வண்டிதான்.'

இது இப்படியிருக்கையில், நோயாய்க்கிடந்த குழந்தையின் பக்கத்தில் இருந்ததாயானவள் மூத்தபெண்ணுகிய மாணிக்கத்தைக்குழந்தை யண்டை உட்காரவைத்துத் தன் புருஷனிடம் ஓடோடியும் வந்து "ஐயா! குழந்தைக்குச் சுவாசம் குறைந்துவருகிறது. கைநெருப்புப் பறக்கிறது. உடனே வைத்தியருக்கு ஆளனுப்புங்கள்.'' என்று சொன்னாள். உடனே வீட்டுவேலைக்காரியை வைத்தியரிடம் அனுப்பினர்கள்.

உடனே கிருஷ்ணனும் கோவிந்தனும் "நாயனு! எங்களுக்குப் புறப்படமணியாயிற்று?'' என்று கேட்டார்கள்.

அவர் மடியிலிருந்த தம் கைகடியாரத்தை எடுத்துக்கொண்டே "இந்நேரம் மணியாகியிருக்கலாம்' என்று சொல்லி கடியாரத்தைத் திறந்து பார்க்க, "அடடா! இந்நேரம் வண்டி போயிருக்கும். பன்னிரண்டரை யாய்விட்டதே'' என்று சொன்னர்.

அப்போது அவர் பெண்டாட்டி "உங்களுடைய கைகடியாரம் சீக்கிரம் போகிறாப்போலிருக்கிறது. பெரிய கடியாரம் இன்னும் பன்னிரண்டு அடிக்கவில்லையே'' என்றாள்.

கிருஷ்ணனும் தைரியத்துடன் "ஆமாம் இன்னும் பன்னிரண் டடிக்கவே யில்லை'' என்றுசொன்னன். தாயார் போய் கடியாரத்தைப்பார்க்க கடியாரம் நின்றுபோய்விட்டதாகக் கண்டாள்.

அது கேட்டமுதலியார் "ஐயையோ! ஒரு பெரிய காரியார்த்தமாகப் பன்னிரண்டுமணி வண்டிக்கு ஒருவரைப்போய் கண்டுபேச உத்தேசித்திருந்தேன், என்ன செய்வேன்'' என்று வருத்தப்படுகையில்,

தாயானவள் "ஐயோ! ஐயோ! வைத்தியர் இந்நேரம் வெளியே போய் விட்டிருப்பாரே. அடியம்மா ருக்மணீ! என் குழந்தாய்! என்ன செய்வேன்'' என்று கையை முறித்துக் கொண்டு குழந்தையண்டை ஓடினாள்.

இதுகண்ட கிருஷ்ணன் "அம்மா! பயப்படாதே, நான் ஒரே ஓட்டமாக ஓடி வைத்தியரை இட்டுக்கொண்டு வருகிறேன்'' என்று ஓடினன். கோவிந்தனும் அவன் பின்னே ஓடினன்.

இருவரும் ஒரே மூச்சாக ஓடி வைத்தியர் வீட்டுக்கதவைத் தட்டி "வைத்தியர் இருக்கிறாரா'' என்று அழைத்தார்கள். உள்ளே வைத்தியர் பெண்டாட்டி "பன்னிரண்டே கால்மணிக்குப் புறப்பட்டு வெளியில் வழக்கம்போலப்

போய்விட்டார்" என்று சொன்னாள். கிருஷ்ணன் "அவர் யாருடைய வீட்டுக்குப் போயிருக்கிறார் தெரியுமா அம்மா?" என்று கேட்டான்.

அந்நேர வேளையில் ஒரு சிறு பெண்ணோடு பேசிக்கொண்டிருந்தவைத்தியர் பெண்டாட்டியானவள் "முதலில் இன்னார் வீட்டுக்குப் போயிருப்பார் என்பது செம்மையாய்த் தெரியாது. இப்படி வந்து சற்றுநேரம் இருப்பாயானால் எனக்குத் தெரிந்தமட்டில் சொல்லுகிறேன்" என்றாள்.

இதைக்கேட்டதும் உகிர்ச்சுற்றின் மேல் அம்மி விழுந்தாப்போலச் சற்றுநேரங் காத்திருந்தார்கள். அப்போது மேலே சொன்ன சிறுபெண்ணானவள் தங்கள் வீட்டிற்கு அண்டையில் வசிக்கும் ஒரு ஏழைக் கைம்பெண்ணினுடைய மகள் என்று தெரியவந்தது.

அந்தப்பெண், வைத்தியர் பெண்டாட்டியை "ஆனால் அந்த வேலை எனக்குக் கிடைக்கும் என்ற எண்ணமில்லையா? அம்மணி!" என்றாள்.

வைத்தியர் பெண்டாட்டி "ஐயோ பாவம் உன்னைப் பார்த்தால் பரிதாபமாயிருக்கிறது. என்ன செய்வேன். நீ சொன்னது போல் சரியாகப் பன்னிரண்டு மணிக்கு வந்திருந்தால் அந்த வேலை உனக்கே கிடைத்திருக்கும் உனக்காக நான்வெகுதூரம் பரிவாகப்பேசினேன் பன்னிரண்டேகால் மணிவரையிலுங் கூடப் பார்த்தோம். அப்படி காத்துக்கொண்டிருக்கும்போது இன்னொருவர் வரவே அவரைப் பேசி அந்த வேலையில் வைத்தாய்விட்டது. சொன்னது சொன்னபடியே அந்தந்த வேளைக்கு அந்த வேலையைச் செய்யாதவர்கள் எனக்குச் சரிப்படுவதில்லை. நீ என் அந்த வேளைக்கு வராமற் போனாய்?" என்று கேட்டாள்.

அதற்கு அந்தப்பெண் "அம்மா! நான் முன்னதாகவே வந்தேன். வரும்போது இராமசாமி முதலியார் வீட்டண்டையில் மணியென்னவென்று கேட்டேன். அங்கிருந்த ஆள் கடியாரம் பார்த்துப் பதினொன்றேகாலாயிற்று என்று சொன்னான். அதன்மேல் நான் சரியான வேளைக்குப் போகலாமென்று முன்னும் பின்னுமாகக் கொஞ்சநேரம் உலாவிக்கொண்டிருந்து வந்தேன். ஐயோ! அரைமணி நேரத்திற்கு மேலே ஆய் விட்டதென்றும் அதனால் எனக்குக் கிடைக்கக்கூடிய வேலையை இழக்கலாயிற்றே என்றும் காண என்மனம் துடிக்கின்றது. ஐயோ! என்தாய் இதைக்கேட்டால் மனவருத்தமடைவாளே! என்ன செய்வேன்" என்று சோகித்தாள்.

வைத்தியன் பெண்டாட்டி "இது உன்னால் வந்த தப்பிதமுமல்ல; நல்லது, அந்தப் பிள்ளைகள் காத்துக்கொண்டிருக்கிறார்கள்" என்று சொல்லி அவர்களை நோக்கி வந்தாள்.

அப்போதுகிருஷ்ணன் "ஐயோ! கோவிந்தா! உன் பேச்சைக்கேளாமற் போனேனே. நான் செய்த தந்திரத்தினால் எத்தனை துன்பம் உண்டாயிற்று பார்த்தாயா. இப்படி இந்தப் பன்னிரண்டுமணியை இத்தனை காரியம் பற்றிக்கொண்டிருப்பதுண்டா!" என்று சொல்லிக்கொண்டிருந்தான்.

வைத்தியன் பெண்டாட்டியும் மூவர் நால்வருடைய பேரைச்சொல்லி அவர்களுடைய வீட்டிற்குப்போய் வைத்தியரைக் கண்டு பிடிக்கலாம் என்று சொன்னாள். அவர்களும் அது கேட்டதும் தாமதிக்காமல் அங்கங்கே அலைந்து திரிந்து அலுத்து, அதிவேகமாக வீட்டு முகமாய் வருகிற வைத்தியரைக்கண்டு வண்டியை நிறுத்தி, சங்கதியைச் சொல்லி வைத்தியரை இட்டுக்கொண்டு போனார்கள்.

வைத்தியரும் குழந்தையை நாடி பிடித்துப் பார்த்துவிட்டு, வெளியேவந்து "ஐயோ பாவம்! சிறு குழந்தை, மிஞ்சிப்போய் விட்டது. இனி மனுஷப் பிரயத்தனத்தாலாவது ஒன்றுமில்லை. கெட்டகுறிகள் தொடங்கிவிட்டன, நோய்க்கு மருந்து; விதிக்கு மருந்தேது"! என்று சொல்லிப் போய்விட்டார்.

அன்றிரவெல்லாம் கிருஷ்ணனுக்குத் தூக்கம் பிடிக்கவேயில்லை. அவன் எண்ணமென்னமோ சித்தியாயிற்று. இரண்டொரு நாள் பள்ளிக்கூடம் போகத் தடை உண்டாயிற்று; மெய்தான். அதனாலுண்டான நஷ்டம் எவ்வளவு. கடியாரம் டிக் டிக் என்று அடிக்கும் ஒவ்வொரு சப்தமும் அவன் இருதயத்தைத் துடிக்கச் செய்தது. அதைப் பொறுக்கமாட்டாமல் கதவைத்திறந்து வெளியே போய் அவன் தங்கையைப் படுக்க வைத்திருந்த அறைக்கு வெளியே ஒரு தூணின்மேல் சார்ந்து கொண்டு அவ்வறையின் கதவினுடைய துவாரங்களில் தெரியும் விளக்கொளியைப் பார்த்துக்கொண்டிருந்தான்.